## புது அழகுடன் விளங்க

# பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகியுங்கள்

### சருமத்தைப் பட்டுப்போல் மிருதுவாக வைத்துக்கொள்ளுங்கள்

வெண்பனி போன்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை உபயோகித்து உங்கள் சருமத்துக்கு புதுப் பொலிவை அளியுங்கள். பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் முகத்தில் கரும்புள்ளிகள் தோன்றுவதைத் தடுத்து, எண்ணெய் வழியும் தோற்றத்தை மாற்றி சருமத்தில் வெயிலினாலும் காற்றினாலும் வறட்சியேற்படாமல் பாதுகாப்பளிக்கும். பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமை மட்டுமே உபயோகித்தால்கூட முகம் பட்டுப்போல் விளங்கும். அதன் மீது பவுடரும் போட்டுக்கொண்டால் பவுடர் ஒரே சீராகப் படிந்து மணிக்கணக்கில் அப்படியே கலையாமல் இருக்கும்.




சிஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

நினைவுத் திரையில்...

விளக்கெண்ணெய்த் தலையங்களும் அத்தைப் பாட்டிக் கதைகளும் எழுதுவதை விட்டுக் கல்கியில் கலை, அழகு, சிற்பம், சித்திரம் என்று எழுதுவதால் என் போன்றவருக்கு ஏற்படும் கஷ்ட நஷ்டங்களைச் சொல்லி முடியாது.

'அஜந்தா அற்புதங்கள்' வெளிவந்தன. அதைப் பார்த்ததும் என் மாப்பிள்ளையை அஜந்தாப் பித்து பிடித்தது; எனக்கு ரூ. 300 நஷ்டம்!

பிற்பாடு சாந்திநிகேதன் கட்டுரை வெளியாயிற்று. அதுவும் என் மாப்பிள்ளையைக் கல்கத்தாவுக்குக் கல்தா கொடுத்தது; ரூ. 200 நஷ்டம்!

இப்போது 'சரோஜியின் கலைக் கோயில்' அழைப்பு விடுத்திருக்கிறது! பள்ளிக்கூட விடுமுறை. குடும்பம் முழுதும் கிளம்பி விட்டால் ரயில் செலவுக்கு என்ன செய்வது?

திருவனந்தபுரம்
26-3-1949

வி. எஸ். மணி

(வட்டமேஜைக் கடிதம்)

# கல்கி

## பொருளடக்கம்

பராபவ, ஆனி 26 - ஜூலை 10



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே

ஆபரேஷன் செய்தால் இதைக் குதிரை போலத் தோன்றச் செய்யலாம்.

பெர்மிட்

லைசென்ஸ்

இறக்குமதி

நீக்கம்

காங்கிரஸ் சர்க்கார்



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 25 ✲ இதழ் 50



# சட்ட நிபுணர்களின் எச்சரிக்கை!

"அடிப்படைக் கோளாறு என்னவெனில், இன்று சட்டம் செய்பவர்கள், அடுத்த தலைமுறையினரைப் பற்றிய சிந்தனையை விட்டு, அடுத்த தேர்தலிலேயே நாட்டத்தோடு இருக்கிறார்கள். மனிதன் இரண்டு கால் கொண்ட வோட் என்பதுதான் அவர்கள் எண்ணம். அவன் வோட் மட்டுமல்ல, மனிதனும் கூட என்பதையே மறந்து விட்டார்கள்.'' இவ்வாறு இந்திய அரசாங்கத்தின் பிரதம வழக்கறிஞரான அட்டர்னி ஜெனரல் திரு ஸி. கே. தாப்தரே அவர்கள் பம்பாய் ரோட்டரி கிளப்பில் பேசியிருக்கிறார். இன்றைய ஆட்சியாளரைப் பற்றித் தம் சொந்த அபிப்பிராயத்தை மிக வன்மையாக வெளியிட்டிருக்கிறார். அவர் வாக்குக்குத் தனி வேகமும் செல்வாக்கும் உண்டு.

அரசாங்கம் இயற்றியுள்ள நில உச்ச வரம்புச் சட்டம், சர்க்கார் துறையை விரிவாக்கும் முறைகள் இவை யாவும் அடுத்த தேர்தலில் வோட்டுக் கிடைக்குமா என்ற குறுகிய நோக்கத்தோடு தான் செய்யப்பட்டன. அதன் விளைவுகளை அனுபவித்து வருகிறோம். உணவு தானிய விளைவு பெருகவில்லை. தொழில் பெருகவில்லை. அந்நியச் செலாவணித் தட்டுப்பாடு கடுமையாகி உள்ளது. விலைவாசிகள் ஒரேயடியாக உயர்ந்துள்ளன!

இப்படிக் காரிருள் சூழ்ந்த நிலையில், வழி தெரியாது அலைகடலில் தத்தளிக்கும் கப்பலுக்குத் துருவ நட்சத்திரம் தென்பட்டாற்போல், சுதந்திரக் கட்சியின் நட்சத்திரக் கொடி வழிகாட்டியாக விளங்கி வருகிறது. மனிதனை மனிதனாக மதிக்க வேண்டும் என்று திரு தாப்தரே கூறியிருப்பதே அதன் கொள்கை.

சென்ற வாரம் ஓய்வு பெற்ற சென்னை பிரதம நீதிபதி திரு சந்திரா ரெட்டி அவர்கள் விடுத்துள்ள எச்சரிக்கையையும் கவனிக்க வேண்டும். ''மக்கள் நீதி மன்றங்களில் நம்பிக்கை இழக்க நேர்ந்தால் ஜனநாயகம் கவிழ்ந்து விடும்'' என்று அவர் கூறியிருக்கிறார்.

சட்டசபை, நீதிமன்றம், நிர்வாகம் ஆகிய மூன்று தூண்களில் நிற்கும் கட்டடமே ஜனநாயகம். சட்டசபையும் நிர்வாகமும் மக்களுக்கு அநீதி இழைத்தால் நடுநிலையில் இருந்து நீதி வழங்குவது நீதி மன்றம். சமீப காலத்தில், அரசாங்கம் நீதி மன்றத்தின் கௌரவத்தைக் குலைக்கும் காரியங்களையே செய்து வருகிறது. காரணம் தேர்தல் கண்ணோட்டத்திலேயே சட்டம் செய்வதுதான். உதாரணமாக, நகர்ப்புற நில வரி செல்லாது என்று நீதி மன்றம் தீர்ப்பளித்தவுடன் உண்மையான ஜனநாயக சர்க்காராக இருக்கும்பட்சத்தில் அந்தத் தீர்ப்பை மதித்திருக்க வேண்டும். அரசாங்கமோ, கவர்னரின் விசேஷ அதிகாரத்தைப் பிரயோகித்து அதை அவசர காலச் சட்டமாக்கியது. இந்நிலையில் மக்களுக்கு நீதி மன்றங்களிடம் போக எப்படி உணர்ச்சி வரும்?

புதிதாக சுப்ரீம் கோர்ட்டின் பிரதம நீதிபதியாக நியமிக்கப்பட்டுள்ள திரு கே. சுப்பாராவ் அவர்களும், 'பொருளாதாரம், கல்வி, அரசியல் அறிவு ஆகியவற்றில் பின்தங்கியுள்ள பெரும்பான்மையான மக்கள் அரசாங்க இயந்திரத்துடனும், அதன் நிறுவனங்களுடனும் முகம் கொடுத்து நிற்க முடியவில்லை; இச்சமயங்களில் நீதி மன்றங்களே மக்களுக்கும் தெரியாத அவர்களது தனி மனித உரிமைகளை நிலைநாட்ட வேண்டும்; அரசியல் சாஸனத்தில் வகுக்கப்பட்டுள்ள உன்னதமான ஜீவாதார உரிமைகளை ஒருகாலும் புறக்கணிக்கக் கூடாது' என்று தமது தீர்ப்பு ஒன்றில் கூறியுள்ளார்.

சர்க்காரிடம் சட்டத்தைப் புறக்கணிக்கும் மனோபாவம் வளர்ந்து வருவதை உணர்ந்தே சட்ட நிபுணர்கள் எச்சரிக்கை விடுத்துள்ளனர். எச்சரிக்கையை அரசாங்கம் ஏற்காது. மக்கள் தான் ஏற்று அதற்குத் தகுந்தபடி நடக்க வேண்டும் — அதாவது இவ்வரசாங்கத்தை அகற்ற வேண்டும்.

# நல்வரவாகுக!

தமிழகத்தின் ஆக்டிங் கவர்னராக நிய மிக்கப்பட்டுள்ள ஸ்ரீ உஜ்ஜல் சிங் அவர்களை அன்புடன் வரவேற்கிறோம்.

சீக்கியர்களுக்குத் தனி ராஜ்யம் தோன்ற இருக்கும் சமயத்தில் இந்தச் சீக்கியர் நம் மாநிலத்துக்கு வருகிறார். சீக்கியத் தலைவ ராக லண்டன் வட்டமேஜை மகாநாட்டில் கலந்து கொண்டவர் உஜ்ஜல் சிங். சிறு பான்மையினரின் உணர்வுகளை நன்கு மதிக் கத் தெரிந்தவர். அவர் முப்பதாண்டுகள் பஞ்சாப் சட்டசபையில் அங்கத்தினராக இருந் திருக்கிறார். மந்திரியாகவும் அநுபவம் பெற்ற வர் அவர். சென்ற ஆண்டு பாகிஸ்தான் ஆக்கிரமிப்புக்குப் பஞ்சாப் ஆளானபோது ஸ்ரீ உஜ்ஜல்சிங்தான் கவர்னராக இருந்தார். இச்சமயத்தில் பஞ்சாபின் தொழில்கள் தடுமாற்றமடைந்தன; தொழிலாளிகள் பெரு மளவில் வெளியேறி விட்டனர்; எனினும் போர்முனைக்கு ஸப்ளைகளைத் தடையுறுமல் அனுப்பும் கடும் பணியைச் சர்க்கார் சாதிக்க வேண்டியிருந்தது. நிலைமையைச் சமாளித்த தில் ராஜ்யத்தின் கவர்னரான ஸ்ரீ உஜ்ஜல் சிங்குக்குத் தனி இடம் உண்டு.

தமிழர்களைப் பற்றி உயர்ந்த கருததுக் கொண்டுள்ள புதிய ஆக்டிங் கவர்னருக்கும் நம் மக்களுக்குமிடையே நல்ல நேச பாவம் தோன்றுமென்று நம்புகிறோம்.



# ஏகபோகத்தின் விளைவுகள்

இந்தியப் பொறி இயல்கழகத் தலைவர் ஸ்ரீ எஸ். கே. தத்தர் அவர்கள் சர்க்கார் தொழிலின் ஏகபோக்கியப் போக்கை ஆட்சே பித்திருப்பது வரவேற்க வேண்டிய விஷயம். அரசியல் நோக்கம் ஏதுமின்றி, இதைப் பொருளாதாரப் பிரச்னையாகவே ஆராய்ந்து தமது கருத்துக்களை அவர் வெளியிட்டிருக் கிறார்.

'சர்க்காருக்குள்ள அதிகாரத்துடன் பொரு ளாதார அதிகாரமும் சேர்ந்துவிட்டால் அது தனி மனிதர்களின் சுதந்திரத்துக்கு, சுதந்திர மான பொருளாதாரத்துக்கு ஆபத்து விளை விப்பதாகும்' என்கிறார் அவர். ஏகபோக்கியம் பற்றியும், ஒரே இடத்தில் பொருளாதார சக்தி குவிவது பற்றியும் பெருத்த கண்ட னங்கள் தெரிவிக்கப்படுகின்றன. ஆனால் தனியார் துறையை விடச் சர்க்கார் துறை யில்தான் அவை அதிகமாக உள்ளன என் கிறார் ஸ்ரீ தத்தர். 1965 மார்ச்சில் இந்தியா வில் இருந்த 26,653 கம்பெனிகளில் சர்க்கா ருக்குச் சொந்தமானவை 183தான். அதா வது மொத்தத்தில் ஒரு சதவிகிதத்துக்கும் குறைவு. ஆனால் மொத்த மூலதனமாகிய 2636 கோடி ரூபாயில் நாற்பது சதவிகிதம் இவற்றிலேயே ஈடுபடுத்தப் பெற்றிருந்தது என்பதிலிருந்து அவற்றிடம் எவ்வளவு பொரு ளாதார சக்தி குவிந்திருக்கும் என்பதை ஊகிக்கலாம்.

எப்படியெல்லாம் தனியார் துறையைக் கஷ்டப்படுத்திச் சர்க்கார் துறையைப் பேணி யிருக்கிறார்கள் என்பதற்கு ஸ்ரீ தத்தர் பல உதாரணங்கள் தருகிறார். லைசென்ஸ்—கண்ட் ரோல்களைப் பிரயோகித்துத் தனியாரின் சில தொழில்களை விஸ்தரிக்க முடியாமல் செய்திருக்கிறார்கள். இறக்குமதி செய்வதில் சர்க்கார் கம்பெனிகளுக்கு முதலுரிமை தந் திருக்கிறார்கள். தொழிற்சாலைகளுக்கான மனைக் கட்டுகளைப் பெற்றுத் தருவதிலும், தொழிலாளர் சட்டத்திலிருந்து விலக்கு அளிப்பதிலும் சர்க்கார் தொழிலகங்களுக்குச் சலுகைகள் காட்டியிருக்கின்றனர்.

சில உதாரணங்கள்: நைனி என்ற இடத் தில் சர்க்கார் துறையில் இனிமேல் நிறுவப் படவிருக்கும் தொழிற்சாலையில் 'கம்ப் ரெஸர்கள்' தயாரிக்க உத்தேசித்திருப்பதால் தனியார் துறையில் யாரும் இந்த உற்பத்தி யில் பிரவேசிக்க முடியாமல் தடுத்திருக் கிறார்கள். நைனி தொழிற்சாலையின் உற் பத்தி எந்த அளவில் இருக்கும் என்று நிர்ண யிக்க இயலாதபோதே இப்படிச் செய்திருப் பது குறிப்பிடத் தக்கது. 1959ல் ரஷியா வுடன் நமது சர்க்கார் ஒப்பந்தம் செய்து கொண்டதால் கடந்த ஏழாண்டுகளாகவே கம்ப்ரெஸர் உற்பத்தி தடை செய்யப்பட் டிருக்கிறது. கம்ப்ரெஸர்கள் நமது தொழில்களுக்கு மட்டுமின்றி ராணுவத்

துக்கும் தேவைப்படுபவை என்பதைக் குறிப்பிடவேண்டும். உள்நாட்டு உற்பத்திக்கு இடமில்லாததால், பொருளாதார நெருக்கடி காரணமாகப் பல இறக்குமதிகளைத் தடை செய்த காலத்திலும் ஏராளமான பொருட் செலவில் இவை இறக்குமதி செய்யப்படுகின்றன.

இனி என்றோ ஒரு நாள் ராஜஸ்தானத்தில் கோடாவிலும், பாலக்காட்டிலும் சர்க்கார் தயாரிக்கவிருக்கும் கருவிகளுக்குப் போட்டி ஏற்படக் கூடாது என்ற கருத்தில் பல கருவிகளைத் தனியார் உற்பத்தி செய்ய முடியாமல் செய்திருக்கின்றனர். தனியார் உற்பத்திக்கு இறக்குமதி எதுவுமே தேவைப்படவில்லை. அப்படி இருந்தும் சர்க்கார் கொள்கையால் இந்தத் தொழிற்சாலைகளின் சிப்பந்திகளும் ஆட்களும் வேலையற்றுப் போயிருக்கின்றனர். மொத்தத்தில் உற்பத்தி தடுக்கப்பட்டிருக்கிறது. குறைந்த விலையில் உள்நாட்டு உற்பத்தி நடைபெற இடமில்லாததால், பொருளாதார நெருக்கடி காலத்திலும் பெருத்த பணச் செலவில் இக்கருவிகள் இறக்குமதி செய்யப்பட்டன. 1965ல் சர்க்கார் வர்த்தக கார்ப்பரேஷன் மட்டுமே கிழக்கு ஐரோப்பிய நாடுகளிலிருந்து ஒன்றரைக் கோடி ரூபாய்க்குக் கருவிகளை இறக்குமதி செய்தது.

ருஷியாவுடன் ஒன்பது ஆண்டுகளுக்கு முன் கூட்டுத் திட்டம்போட்டும், இன்றுவரை செயலுக்கு வராத துர்க்காபூர் கண்ணாடித் தொழிற்சாலையின் ஏகபோக்கியத்தைக் காப்பதற்காக மூக்குக் கண்ணாடி, காமிரா, சூட்சும தரிசினி இவற்றுக்குதவும் கண்ணாடிகளைச் செய்யத் தனியாருக்கு அநுமதி மறுக்கப்படுகிறது. இந்த ஒன்பதாண்டுகளாக வருடம் தோறும் சுமார் 20 லட்சம் ரூபாய்கள் இக்கண்ணாடிகளின் இறக்குமதிக்காக வெளிநாடுகளுக்குச் சென்றிருக்கின்றன. துர்க்காபூர் ஆலை உற்பத்தி தொடங்கிய பின்னரும் அது விற்கும் கண்ணாடியின் விலை மிக உயர்வாக இருக்கப் போகிறது. 300 டன் வருடாந்தர உற்பத்திக்குச் சர்க்கார் மூன்றரைக் கோடி ரூபாய் மூலதனம் போடவிருக்கிறது. இதே 300 டன்னை 60 லட்சம் ரூபாய் மூலதனத்திலேயே தனியார் உற்பத்தி செய்ய முன் வந்தனர். அதோடு உற்பத்தியைத் தொடங்கச் சர்க்காருக்குப் பத்து ஆண்டுகள் ஆகிற தென்றால், தனியாரோ பதினைந்தே மாதத்தில் இதை முடிப்பதாகத் திட்டமிட்டிருந்தனர். ஆயினும் சர்க்கார் துறைக்குச் சாதகமாகவே அரசாங்க உத்தரவு பிறப்பிக்கப் படுகிறது.

இதே போல் போபால், ஹரித்வாரம், ஹைதராபாத், திருச்சி ஆகிய இடங்களிலுள்ள சர்க்காரின் கனரக விசைத் தொழிற்சாலைகளுக்குப் போட்டி ஏற்படக் கூடாது என்பதால், தனியார் துறையினர் 50,000 ரூபாய் விலைக்குத் தயாரிக்கக் கூடிய டர்போ ஆல்டர்நேடரின் உற்பத்தியைத் தடுத்து, இதுபோல் பத்துமடங்கு விலைக்கு அதாவது 5 லட்சம் ரூபாய்க்கு இக்கருவிகளை இறக்குமதி செய்யுமாறு பண்ணியிருக்கின்றனர்.

சர்க்காரின் நலனைக் கவனியாமல் உற்பத்திப் பண்டத்தை வாங்குவோரின் நலனையே கவனிப்பதென்றால், அரசாங்கத் தொழில்களுடன் தனியாரும் போட்டியிட அநுமதிக்க வேண்டும். போட்டியில் சர்க்கார் துறையின் தகுதி வெளியாகவில்லையானால் மற்ற எந்தக் கம்பெனி போலவும் அதை மூடிவிட வேண்டும். நிரம்பக் காலம் எடுத்துக் கொண்ட பின்னும் ஒரு சர்க்கார் நிறுவனத்தால் லாபம் எடுக்க முடியாவிடில் அதன் முதலீடு தேசத்துக்கே ஒரு நஷ்டமாகும். இச்சமயத்தில் அதைத் தனியார் துறைக்கு மாற்றிவிடவேண்டும். அல்லது அதன் சொத்துக்களை விற்றுக் கடையைக் கட்டிவிட வேண்டும்.

சர்க்கார் துறையில் திறமையின்மையோடு ஏகபோக்கியமும் சேர்ந்துவிட்டதால் எவ்வளவு ஊறு நேர்ந்திருக்கிறது என்பதை ஸ்ரீ தத்தர் ஆணித்தரமாக நிரூபித்து விட்டார்.

---

## இசை உலகின் இழப்பு

நீண்ட அநுபவம்பெற்ற வயலின் வித்துவானாகிய திருவாலங்காடு ஸ்ரீ சுந்தரேசய்யர் அவர்கள் காலமான செய்தி கேட்டு வருந்தாத ரசிகர் இல்லை. திருக்கோடிகாவல் ஸ்ரீ கிருஷ்ணய்யர் என்ற மகாவித்வானின் வயலின் முறையைச் செம்மங்குடி ஸ்ரீ நாராயணசுவாமி அய்யர் அவர்களின் வழியாக ஸ்வீகரித்த ஸ்ரீ சுந்தரேசய்யர் தூய கர்நாடக பாணிக்கு ஒரு பிரதிநிதியாக விளங்கி வந்தார். பாலைச் சுண்ட வைத்துத் திரட்டுப் பாலாக்குவதுபோல், ராகங்களின் ஜீவனைச் சுருக்கித் திரட்டிப் பாக்கோவாபோல் எடுத்துத் தந்ததே அவரது விசேஷப் பெருமை. அவரது சங்கீதத்தையும், குழந்தை போல் அனைவருடன் பழகும் அவரது மனப் பாங்கையும் இசையுலகம் மறவாது.



★

வியட்காங் கிளர்ச்சிக்கு ஹனோய் உதவி புரியாமல் தடுக்க வேண்டுமென்பதற்காக அந்நகரத்தின் மீதே குண்டுவீச உத்தரவு பிறப்பித்துள்ள அமெரிக்க ஜனாதிபதி ஜான்ஸனை அனைவரும் கண்டனம் செய்கிறார்கள். அவர்களோடு சேர்ந்து அவருடைய முதுகில் கத்தியால் குத்துவதற்கு என்னால் முடியவில்லை. நாசகாரக் கோஷ்டி ஒன்றின் வழியாகப் பலவந்தத்தின் மூலம் தெற்கு வியட்நாமை வடக்கு வியட்நாமுடன் இணைக்க ஹனோயில் முயற்சி நடக்கிறது. அஹிம்ஸா மார்க்கத்தை விட்டு, அந்நியர் அனுப்பிய ஆயுத பலத்தைக் காட்டிக் கிராம மக்களை அச்சுறுத்துபவர்கள் மீது ஜான்ஸன்




அவர்கள் ராணுவ நடவடிக்கை எடுப்பதை எப்படித் தவறு என்று சொல்ல முடியும்? இந்தியாவும் ஜான்சனைக் கண்டிக்கும் கோஷ்டிகளைத்தில் சேர்ந்திருப்பது தவறு என்றே கருதுகிறேன். அவர் செய்தது சரியென்றும், மிகவும் கடினமான சூழ்நிலையில் தம்மால் முடிந்ததல்வளவையும் அவர் செய்கிறார் என்றும் கருதுகிறேன். அவரைப் போன்று அதிகாரபூர்வமாகப் பொறுப்பேற்றவர்கள் பலாத்கார கம்யூனிஸத்தை அடக்கியே ஆக வேண்டும்.

★

ஒரிஸ்ஸாவில் காங்கிரஸின் தேர்தல் திட்டத்தை வகுக்கும் மகா மண்டலாதிபதியாக ஸ்ரீ விஜய பட்நாயகரைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். தேர்தலில் காங்கிரஸ் பெரிய சங்கடத்தை எதிர்பார்க்கிறது என்பது இதன் பொருள்.

சுதந்திரக் கட்சியும், ஜன காங்கிரஸ் கட்சித் தலைவர்களும், பூதானத் தலைவர் நபா கிருஷ்ண சௌதிரியும், பழைய காங்கிரஸ் பிரமுகர் ஸ்ரீ ஹரே கிருஷ்ண மஹதாப்பும் ஒரிஸ்ஸாவில் காங்கிரஸைப் பதவியிலிருந்து இறக்க வழி என்னவென்று ஆலோசித்து வருகிறார்கள்.

ஆட்சி மாறவேண்டும் என்ற விருப்பம் வளர்ந்து வருவதைக் காணாத குருடனாகக் காங்கிரஸ் இருக்கிறது. ஜூன் 6-ந் தேதியன்று ரூபாய் மதிப்பைக் குறைத்துத் தன்னைக் குற்றவாளியாக அம்பலப்படுத்திக் கொண்ட பின்னும் மக்களின் விருப்பத்தை அழிக்க அது முழு மூச்சுடன் முயலுகிறது.

★

விருதுநகரில் ஜூன் 25ந் தேதி நடைபெற்ற சுதந்திரக்கட்சி மகாநாடு ஒரு மாவட்ட மகாநாடுதான். எனினும் காங்கிரஸ் அக்கிராசனராகிய திரு காமராஜ் அவர்களின் பிறந்த ஊரில் நடைபெற்றதால் அது பெரிய முக்கியத்துவம் பெற்றது. ஆசாரிய ரங்கா அவர்களும் நானும் மகாநாடு, பொதுக்கூட்டம் இரண்டிலும் பேசினோம். கன்யாகுமரியைச் சேர்ந்த ஒரு எம். எல். ஏ. அன்று மேடையேறித் தாம் சுதந்திரக் கட்சியில் சேர்ந்து விட்டதாகத் தெரிவித்தார். வர்த்தக சமூகத்தினர் பயத்தை உதறித் தள்ளிவிட்டுக் காங்கிரஸை அகற்ற முன்வர வேண்டுமென்று மகாநாட்டுத் தலைவர் திரு ஜி. கே. சுந்தரம் அவர்கள் வலியுறுத்தினார். வரவேற்புக் கமிட்டிக்குத் தலைவராக இருந்த திரு ஆர். டி. பி. சுப்பிரமணிய நாடார் சமீபகாலம் வரையில் ஸ்ரீ விநோபாபாவேயின் கீழ் சர்வோதய இயக்கத்தில் பணிபுரிந்தவர். ஜனநாயகத்தைக் காப்பதற்காக மகாநாட்டைக் கூட்டி நிர்வகித்ததில் அவர் ஆற்றிய தொண்டு பாராட்டுக்குரிய விதத்தில் வெற்றி கண்டுள்ளது.

★

நாட்டின் சக்திக்கு மீறிய திட்டங்களைப் போட்டு அதைத் திவாலா நிலைக்குக் கொண்டு வந்ததை ஒப்புக் கொள்வதே ரூபாயின் மதிப்புக் குறைப்பு நடவடிக்கை.

அந்நிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யக் கூடிய பண்டங்களின் உற்பத்தியைப் பெருக்குவதற்காக எடுத்த முயற்சி இது. ஆனால் இத்திட்டத்தினால் உள்நாட்டில் ஏற்படக் கூடிய கெட்ட விளைவுகளையும் பொறுமையுடன் தாங்கியாக வேண்டும். சர்க்கார் இப்போதேனும் முரட்டுப் பிடிவாதம் செய்யாமல், கொள்கைகளை மாற்றிக் கொண்டாலே நாணய மதிப்பு மாற்றம் பயன் தரும். இதை இன்றுள்ள சர்க்கார் செய்யாது. எனவே, முற்றிலும் புதிய சர்க்கார் அமைந்தாக வேண்டும்.

1967 தேர்தலின்போது ஆண்களும் பெண்களுமாகக் கூட்டம் கூட்டமாக எழுச்சி பெற்றுச் சம்பளமில்லாமல் தொண்டு புரிந்து வாக்காளர்களை வாக்குச் சாவடிகளுக்கு அழைத்துச் சென்று, காங்கிரஸைத் தோல்வியுறச் செய்ய வேண்டும்.

மானம் குன்றிப் போய் இந்திய தேசம் சர்வதேச அரங்கிலிருந்து வெளியேறுதிருக்க வேண்டுமாயின், வீண் செலவுக்காரர்களின் ஆட்சியை நீக்கி, விவேகமான நிர்வாகத்திடம் நாட்டை ஒப்படைத்தேயாக வேண்டும். காங்கிரஸைத் தவிர வாக்காளர்கள் எந்தக் கட்சிக்கு வேண்டுமாயினும் வாக்களிக்கட்டும். அதன் விளைவு என்னவாயினும், அதனை ராஷ்டிரபதி அவர்கள் ஆராய்ந்து பிரச்னைகளைத் தீர்ப்பார். அரசியல் சாஸனப்படி அமைந்த பொறுப்புள்ள ஓர் ஆட்சியை அவர் தோற்றுவிப்பார். அப்போது தான் கட்சியே தேசம் என்று கருதாத, ஆற்றலும் அடக்கமுமுள்ள, விவேகம் வாய்ந்த பெருமக்களின் கையில் நாட்டின் நலன் ஒப்புவிக்கப்படும்.



# கல்கி



## வெள்ளி விழா மலர்

★ தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் தன் இலக்கியப் பணியைச் சிறந்த முறையில் கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாகச் செய்து வந்து, இன்று இருபத்தாறாவது ஆண்டில் அடியெடுத்து வைக்கவிருக்கிறது கல்கி. இத்தருணத்தில் கல்கி நேயர்கள் தொடர்ந்து இதற்குக் காட்டி வந்திருக்கும் பேராதரவை நன்றியறிதலுடன் நினைவுகூர்ந்து மகிழ்கிறோம்.

★ கல்கியின் வெள்ளி விழாவைக் கொண்டாடும் தருணத்தில் அதன் நினைவாகக் கல்கி வெள்ளி விழா மலர் ஒன்றினை வெளியிடுவது பொருத்தம் என எண்ணி அதற்கான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. கல்கியின் பொன்விழா ஆண்டுவரையிலும் அதற்குப் பின்னரும்கூட நீங்கள் படித்துப் படித்து இன்புறவும் போற்றிப் போற்றிப் பாதுகாத்து வரவும் கூடிய வகையில் ஓர் அரிய இனிய பொக்கிஷமாக வெள்ளி விழா மலர் உருவாகி வருகிறது.

★ தமிழ் நாட்டின் அறிஞர் பெருமக்கள் பலர் வரைந்துள்ள கட்டுரைகள் பல துறைகளையும் அணைத்துச் செல்கின்றன.

★ புகழ் பெற்ற எழுத்தாளர்கள் தங்கள் தங்கள் திறமையை யெல்லாம் காட்டி வெள்ளிவிழா மலருக்கு விசேஷச் சிறப்புடன் கூடிய சிறுகதைகளை எழுதியிருக்கிறார்கள்.

★ மலரில் இடம் பெற்றுள்ள பிரபல ஓவியர்களின் ஏராளமான பல வர்ணப் படங்களில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதத்தில் தனி மதிப்பும் பெறுகிறது; கண்ணைக் கவர்ந்து கருத்தையும் ஈர்க்கிறது.

★ ஹாஸ்ய வேடிக்கைகள், மூவர்ண நகைச்சுவைச் சித்திரங்கள், நிகழ்ச்சித் துணுக்குகள் போன்றவை தாராளமாகவே ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன.

★ நெஞ்சையள்ளும் கவிதைகளுக்குக் குறைவில்லை இம்மலரிலே.

★ இவற்றையும் இன்னும் பல சிறப்புக்களையும் தாங்கி, கல்கி தீபாவளி மலர் அளவில், சிறந்த முறையில் கல்கி வெள்ளி விழா மலர் உருவாகி வருகிறது. ஆகஸ்ட் முதல் தேதியன்று இம்மலர் வெளிவரும்.

★ காகிதக் கட்டுப்பாடு, ரூபாயின் மதிப்புக் குறைப்பு ஆகியவை காரணமாக மிகக் குறைந்த அளவு பிரதிகளே அச்சிட முடிகிறது. ஆகவே உங்கள் பிரதிகளுக்கு முன்கூட்டியே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்துகொள்ளுங்கள்.

**தனிப் பிரதி விலை ரூ. 5. தபால் செலவு ரூ. 1.25. வி. பி. பி. கிடையாது**

# இருமலை நிறுத்த

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

சாப்பிடுங்கள் — சிவப்பு லேபில்





விடாது தொடர்ந்து தொல்லை கொடுக்கும் இருமலைப் பற்றி அசிரத்தையாக இருக்கக் கூடாது. அது உடலைப் பலவீனப்படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைத்து, நோய்கள் எளிதில் பீடிக்கும் நிலையை ஏற்படுத்துகிறது. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் மூன்று விதங்களில் அளிக்கும் பலன் ஒப்பற்றது. அதிலுள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் இருமலை குணப்படுத்துகிறது. இரும்பு சத்து, பலமளிக்கும் சத்துக்கள், மால்ட் மற்றும் ஸ்ப்ளீன் சாரங்கள், பசியைத் தூண்டுகின்றன, இழந்த சக்தியை ஈடு செய்கின்றன, குணமான நோய் மீண்டும் வராமல் தடுக்கும் சக்தியை ஊட்டுகின்றன.

எல்லாக் கால நிலைகளிலும் நோய்களை எதிர்க்கும் சக்தி பெற சிவப்பு லேபிலுள்ள வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுங்கள்.






வாட்டர்பரீஸ் காம்பவுண்டில் கலந்துள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால், சுவாசக் குழாய்களில் கிருமிகளால் அபாயம் ஏற்படாமல் பாதுகாக்கின்றன. கபத்தை 'இளக்கி வெளியேற்றி சுவாசப்பைகளை சுத்தமாக வைக்கின்றன. இருமல், ஜலதோஷம், சுவாசக்குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கவும் மீண்டும் வராமல் தடுக்கவும் உதவுகின்றன.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

**இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு அளிக்கிறது**

வார்னர் ஹிந்துஸ்தான் லிமிடெட், பம்பாய்







## 'செய்திப் படங்கள்

1. திருக்கண்ணபுரம் ஸ்ரீ சௌரிராஜப் பெருமாளுக்கு மாயவரம் ஸ்ரீ ஏ.ஆர். எல். அவர்களால் நிர்மாணித்துக் கொடுக்கப்பட்ட வெள்ளி ரதத்தில் உற்சவம் நடந்தது.

2. சிலம்புச் செல்வர் ம. பொ. சி. அவர்களின் அறுபதாண்டு பூர்த்தி விழா மயிலாப்பூர் ராஜேசுவரி கல்யாண மண்டபத்தில் விமரிசையாக நடைபெற்றது. ம. பொ. சி. அவர்களுக்கு ராஜாஜி பொன்னாடை போர்த்தினர். அண்ணாதுரை அவர்கள் 'கவிஞர் கண்ட ம. பொ. சி.' என்னும் நூலை வெளியிட்டார்.

3. லண்டன் தமிழர்கள் அனுப்பிய பரிசுச் சிலைகளை எம். ஜி. ஆர். நெடுஞ்செழியனிடமிருந்து மகிழ்வோடு பெறுகிறார்.

4. சந்திரனில் இறங்கிய விண்வெளிக் கப்பல் எடுத்த புகைப்படங்கள் அடங்கிய ஆல்பம் ஒன்றை அமெரிக்க ஜனாதிபதியின் சார்பாக ராஷ்டிரபதியிடம் இந்தியாவிலுள்ள அமெரிக்க மிஷன் உதவித் தலைவர் ஜோசப் என். கிரீன் வழங்குகிறார்.





# புல்லரிக்கும் மக்ளீன்ஸ்

## சுவை மூலம்

## உங்கள் வாய்க்குப் புதுமலர்ச்சி புகட்டுவீர்!






**மக்ளீன்ஸ்**

**3 வகைகளில் செயலாற்றுகிறது**

1. சுத்தமாக்க — சொத்தை விழக் காரணமான உணவுத் துணுக்குகளை அகற்றுகிறது.
2. வெண்மையாக்க — மங்கல் படலத்தைப் போக்கிப் பற்களுக்கு மெருகிடுகிறது.
3. காக்க — திட வலுவுள்ள ஆரோக்கியமுடன் உங்கள் பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கிறது.

அதிவெண்மையான பற்களுக்கு —

# மக்ளீன்ஸ்

MTP-I-P-I-65/66 T/M

# சீவனருட் செல்வர்

பெரிய புராணம் ஞானநூல். ஆதலால் அதிலே காதல் இராது. ஆனால் காவியத்துக்கு அகத் துறையும் இருக்க வேண்டும் என்று எண்ணிய சேக்கிழார் பெருமான் அதையும் பாடியிருக்கின்றார். சேக்கிழார் பெருமான் பக்தியுடையவர் மட்டுமன்று; இலக்கண இலக்கியங்களிலும் வல்லவர். செய்யுள் இயற்றுவதில் அவருக்கு நிகர் அவரே. சீவக சிந்தாமணிக்குப் பிறகு செய்யுளாய் எழுந்த நூல் பெரிய புராணம். அதற்கு முன் எல்லாம் அகவற் பாக்கள்தான். சேக்கிழார்க்குப் பின்னர் வந்த நூல்களெல்லாம் அவரைப் பின்பற்றிச் செய்யுளாகவே இயற்றப்பட்டன.

பரவையாருடன் சில காலம் இல்லறம் நடாத்திய சுந்தரர் திருவாரூரை விட்டுப் புறப்பட்டார். பரவையாரைப் பிரிந்தபின் வேதனைப்படுகின்றார் சுந்தரர். தனிமை சிலருக்கு இனிமை; சிலருக்கு வேதனை. சீதையைப் பார்த்த பிறகு தனிமையிலிருந்த இராமர் தூங்கவேயில்லையாம். இராமரைப்போன்றே சுந்தரமூர்த்தி நாயனாருக்கும் தூக்கம் வர வில்லை. அதற்குக் காரணம்



திருமுருக கிருபானந்தவாரியார்

என்ன? கிட்டாத பொருளை விரும்புகின்ற ஒருவனுக்குத் தூக்கம் வராது.

பேர்பரவை பெண்மையினில்
பெரும்பரவை விரும்பல்குல்
ஆர்பரவை அணிதிகழும்
மணிமுறுவல் அரும்பரவை

சீர்பரவை ஆயினாள்
திருவுருவின் மென்சாயல்
ஏர்பரவை இடைப்பட்ட
என்னாசை எழுபரவை.

சேக்கிழார் பெருமானின் புலமையைக் காட்டுகின்ற பாடல் இது. இந்தப் பாடலில் ஏழு பரவைகள் வருகின்றன.

அடக்கம், பெருமை, அன்பு, மென்மை ஆகிய பண்புகள் பெண்மைக் குரியன. அஞ்சாமை, தைரியம், வீரம் ஆகிய பண்புகள் ஆண்மைக்குரியன. பரவையாரிடம் பெண்மைக்குரிய குணங்கள் குவிந்திருக்கின்றனவாம். 'பெரும்பரவை' என்கிறார் சேக்கிழார். அதனைப் பெரு — உம்பர் — அவை என்று பிரிக்க வேண்டும். பெரு — பெரிய, உம்பர்கள்— தேவர்கள், அவை — சபை. பெரிய தேவலோக அவையில் தேவ கூட்டங்கள் எல்லாம் விரும்புகின்ற பெண்கள் பரவையாரிடம் வந்து, அவரைத் தோத்திரம் செய்கிறார்களாம். 'பரவு' என்பது தோத்திரம் செய்தல் என்ற பொருளைக் குறிக்கும். இப்படிப் பரவப்படும் கடவுளாக இருப்பவர் பரவை. 'ஐ' என்பது கடவுளைக் குறிக்கும். இவ்வாறு பொருள் கூறுவதற்கு ஆதாரம் வேண்டுமே?

குறியைக் குறியாது குறித்தறியும்
நெறியைத் தனிவேலை நிகழ்த் திடலுஞ்
செறிவற் றுலகோ டுரைசிந் தையுமற்
றறிவற் றறியாமையு மற்றதுவே

(கந்தரநுபூதி)

இதில் 'தனிவேலை' என்பதில் வேல் ஐ என்பது வேலாயுதமுள்ள கடவுள் என்று பொருள் படும்.

பட்டினத்தாரின் தாயார் இறந்து விட்டார். மயானத்தில் தாயாரின் உடலுக்கு எரியூட்ட வேண்டும் அடிகள். உடல் அங்கே கிடந்தது. சுற்றிலும் உறவினர் நின்றிருந்தனர். அவர்களை ''விலகுங்கள்'' என்று விலக்கிய அடிகள் ''முந்நூறு நாட்கள் சுமந்து பெற்ற தாயார் பிரிந்து போய் விட்டார்களே'' என்று கதறினார்.

''ஏணையிலும், தொட்டிலிலும், மார் மேலும், தோளிலும், கட்டிலிலும் என்னை வைத்து, விரும்பி முற்றிலும் இடுப்பிலும் வைத்துப் பாதுகாத்த அன்னைக்கு விறகிட்டா தீமூட்டுவேன்?'' என்று வாழைத் தண்டை அடுக்கி வைத்து விட்டு,

'' முன்னை யிட்டதீ முப்பு ரத்திலே
பின்னை யிட்டதீ தென்னி லங்கையில்
அன்னை யிட்டதீ அடிவ யிற்றிலே
யானு மிட்டதீ மூள்க மூள்கவே ''

என்று பாடினார். தீ வைக்காமலே இப்படிப் பாடுகின்றார். முன்னை என்றால் முற்காலம்; பின்னை என்றால் பிற்காலம் என்று பொருள் சொல்வார்கள். அவ்வாறு பொருள் கூறுவது பிழையன்று. ஆயின் அவை அத்துணைச் சிறப்புடையன ஆகா. முன் — ஐ என்றால் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் என்ற பொருள் தரும். 'முன்னையிட்டதீ முப்புரத்திலே' என்பது திரிபுர சம்ஹாரம். பின்னையிட்ட தீ என்று பாடினாரே பட்டினத்தார், அதற்குப் பிற்காலம் என்று பொருள் அன்று. பாற்கடலில் முன்னே பிறந்தவர் மூதேவி. பின்னால் பிறந்தவர் சீதேவி. ஆகவே, இலட்சுமி தேவிக்குப் பின்னைப் பிராட்டி என்று பேர். இலங்கைக்குத் தீயிட்டது அனுமன் என்கிறார் கம்பர். பட்டினத்தாரோ 'பின்னை யிட்டதீ' என்று சீதா தேவி இலங்கைக்குத் தீ யிட்டதாகக் குறிப்பிடுகின்றார். இவர்களில் எவர் கூறுவது சரி? தீ வைத்தது என்னவோ அனுமன்தான். ஆனால், அந்தத் தீயை அனுப்பியது சீதை. இதை விபீஷணர் தமது அண்ணன் இராவணனிடம் சொல்லுகின்றார்.



"கோனகர் முழுவதும் நினது
கொற்றமும்
சானகி எனும் பெயர்
உலகின் றம்மனை
ஆனவள் கற்பினால் வெந்த
நல்லதோர்
வானரம் சுட்டதென் றுணர்தல்
மாட்டியோ?"

'மணியார்டர்' பணத்தைத் தபால்காரர் கொண்டு வந்து கொடுத்தாலும் அதை அனுப்பியவர் வேறொருவர்தானே? அதுபோல் அனுமன் தீவைத்திருந்தாலும் அத்தீயை அனுப்பியது சீதை. இவ்வளவும் 'ஐ' என்பது கடவுளைக் குறிக்கும் என்பதற்காகக் கூறினோம்.



பரவையாரின் அழகு தங்களுக்கு இல்லையே என்று குறைப்பட்டுக் கொண்ட ரம்பை, ஊர்வசி, திலோத்தமை ஆகியோர் இந்த அம்மையாரிடம் வந்து நமஸ்காரம் செய்கிறார்கள். தேவலோகமாதர்களாகிய அவர்கள் பரவு — ஐ, பரவை, ஆகவே, பெண்களுக்குள் தெய்வம் அந்த அம்மையார். தாய்மார்







நீங்கள்
பொலிவுடனிருக்க
சார்மிஸ்
உபயோகியுங்கள்!




புதுமை பெறுக... இதம் பெறுக...
நாள் முழுவதும் நளினமாய் இருங்கள் !

நாள் முழுவதும் நளினமாய் இருக்க, புதிய சார்மிஸ் உபயோகித்து, குளுமையையும், புத்துணர்ச்சியையும் பெறுங்கள். பளபளப்பான, புதிய டின்னில் உள்ள சார்மிஸ், வியக்கத்தக்க வகையில் உங்களுக்குப் புத்துணர்ச்சியளித்து உங்கள் அழகைச் சோபிக்கச் செய்யும் அந்த உன்னத மனோரம்மிய நறுமணத்தைக் கொடுக்கிறது.

சார்மிஸ்

உன்னத மனோரம்மிய மணத்துடன் கூடிய
டால்கம் பவுடர்

CH.TP.G.LIT.TK

களுக்கு மிகவும் அழகு தருவது புன்னகை. கணவரைக் கண்டாலும் விருந்தினரைக் கண்டாலும் இரண்டு பற்களை யாவது தெரிய வைக்க வேண்டும். தெய்வயானை எப்படி இருக்கின்றார்?

"முந்தைத் தரு பத்தித் திருநகை அத்தி" என்கிறார் அருணகிரி. அத்தி என்றால் தெய்வயானை. எம்பிராட்டி தெய்வயானை பற்கள் தெரிகின்ற மாதிரி திருநகையா யிருக்கின்றாராம். அணி என்றால் அழகு. அழகு திகழும்படி முத்துப் போல் விளங்குகின்ற பல். பரவையாரின் பல் வரிசை முல்லையரும்பு போன்றிருக்கின்றதாம். மணி முறுவல் அரும் பரவை என்று வருகிறது. அரும்பர் அவை என்று அதனைப் பிரித்துப் பொருள் கொள்ள வேண்டும். சீர் பரவை என்று வருகிறது. சீர் என்றால் இலட்சுமி. இந்த இடத்தில் 'ஐ' என்பதற்குப் பெண் என்று பொருள். இந்த அம்மையாரைக் கண்டு இலட்சுமியே பரவுகின்றாராம். இவ்வாறு ஞான நூலில் ஒரு பெண்ணை வர்ணித்து அவரது காதலையும் பாடுகிறார் சேக்கிழார். சிவனை மறவாத காதல் அது. எனவே ஞான நூலாயினும் இடம் பெற்றது.

## 9. முதலில் பாடும் தனியடியார்

இனி சுந்தரர் பரவையைப் பிரிந்து க்ஷேத்திராடனம் செய்கின்றபோதே நாமும் அடியார்களின் வாழ்க்கையில் க்ஷேத்திராடனம் செய்யலாம். முன்பு ஆரூரில் தேவாசிரிய மண்டபத்தில் சுந்தரருக்குத் 'தில்லை வாழந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்' என்று ஐயன் அடியெடுத்துச் சுந்தரர் பாடினாரல்லவா? பெரிய புராணத்தில் இடம் பெறும் நாயன்மார்கள் யாவரையும் இதில் குறிப்பிட்டு அவர்களுக்குத் தாம் அடியேன் என்கிறார் வன்றொண்டர். அந்தப் பெரியோர்களின் திவ்வியமான வரலாறுகளை இனி பார்க்கலாம்.

சுந்தரமூர்த்தி நாயனார் அடியாரைப் பாடப் போகின்றவர் அன்றோ? ஆகவே அவரிடம் அடியார்களின் பெருமையை எடுத்துரைத்தார் சுவாமி.

இதில் முதலில் கூறப்படும் 'தில்லை வாழ் அந்தணர்' எந்தத் தனிப்பட்டவரையும் குறிக்காத பொதுச் சொல். நடராஜப் பெருமானைச் சேவிக்கின்ற அடியார்கள் அத்தனை பேரையும் சேர்த்துத் தில்லை வாழ் அந்தணர் என்று கூறினர். தில்லை வாழ் அந்தணர் என்போர் சிவனடியே சிந்தித்துப் போற்றியவர்கள். சிவத் தொண்டே அவர்களது தொழில்.

கற்பனை கடந்த சோதி
கருணையே உருவமாகி
அற்புதக் கோல நீடி
அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோம மாகும்
திருச்சிற்றம்பலத்துள் நின்று
பொற்புடன் நடஞ்செய்கின்ற
பூங்கழல் போற்றி! போற்றி!

தில்லைச் சிதம்பரம் விராட் புருஷனுக்கு இருதயத் தானமாம். அங்கு சிவஞான வெளியில் நடேசமூர்த்தி அநவரத ஆனந்தத் தாண்டவம் புரிவர். அவரது குஞ்சிதபாதம் வணங்குவோர்க்குச் சஞ்சித வினைகள் துகள்பட்டு ஒழியும். பொன்னம்பல வாணரை முப்போது மட்டுமின்றி எப்போதும் போற்றி வழிபடும் திருவுடையவர்கள் தில்லை மூவாயிரம் அந்தணர்கள். திருநீறு புனைந்து உள்ளும் புறமும் மாசற்றுவிளங்குபவர்கள் அவர்கள். பெருமை மிகுந்த அவர்கள் அம்பலவாணரது திருத்தொண்டுகளைப் புரிந்து கொண்டு தவம் செய்பவர்கள். முத்தழல் வளர்த்து எத்தலத்துக்கும் நன்மை செய்பவர்கள். நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் ஓதுபவர்கள். மாசிலா மரபில் வந்தவர்கள். மாறிலா ஒழுக்கம் பூண்டவர்கள். அறுதொழில் ஆட்சியாலே அருங் கலியை நீக்குபவர்கள். திருநீற்றையே செல்வமாகக் கொண்டவர்கள். சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு பாதங்களிலும் குற்றமற நிற்பவர்கள். தானமும் தவமும் செய்பவர்கள். குறைபாடு இல்லாதவர்கள். உலகெலாம் புகழ்ந்து போற்றும் மானமும் பொறையும் தாங்கி, மனையறம் புரிந்து வாழ்பவர்கள். எம்பிரானைப் போற்றும் நலத்தை இம்மையில் இனிது பெற்றவர்கள். ஆதலின் இனிப் பெறும் பேறு ஒன்றும் இல்லாதவர்கள். தமக்குத் தாமே நிகரானவர்கள். தென் தமிழ்ப் பயனாய் உள்ள திருத்தொண்டத் தொகை பாடுமாறு வன்றொன்றருக்குத் திருவருள் புரிந்த சிவபெருமானது திருவாக்கால், "தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" என்று முதலடியாக எடுத்துக் கொடுக்கப் பெற்ற நற்றவ முடையவர்கள். அளவற்ற பெருமையும், அருமையும் படைத்து இருமையும் ஒருமையில்

யதி நின்றவர்கள் தில்லை வாழ் அந்தணர்கள்.

சுந்தரர் பாடியது மொத்தம் அறுபது நாயன்மார்களைத்தான். சுந்தரர்க்குப் பின் நம்பியாண்டார் நம்பிகள் திருத்தொண்டத் தொகை பாடிய சுந்தரரையும், அவரது தாய் தந்தையரையும் பாடி அறுபத்து மூவராக்கினர். "சிறப்புடைப் பொருளை முன்னைக் கழற்றல்" என்பது போல் நாயன்மார்களைப் பற்றிச் சொல்ல வந்த சுந்தரர் முதலில் பாடும் தனியடியார் திருநீலகண்டர். "திருநீலகண்டத்துக் குயவனார்க் கடியேன்" என்கிறார்.

மனிதனுக்கு ஆசைகள் மூன்று. மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசை. மண்ணாசையும், பொன்னாசையும் மற்ற ஜீவராசிகளுக்கு இல்லை. பெண்ணாசை அவற்றுக்கும் உண்டு. இந்திரன் அகலிகை மீது ஆசை கொண்டான்; சந்திரன் தாரையைக் கண்டு மயங்கினன்; விசுவாமித்திரர் மேனகை மீது மோகம் கொண்டார். மாயையைக் கண்டு மயங்கினர் காசிபர். ஆனால் துறவறம் பூண்டு காடு செல்லாமல், இல்லறத்திலேயே வாழ்ந்து பெண்ணாசை துறந்தார் திருநீலகண்டர். இதனால்தான் 'மாது சொன்ன சூளால் இளமை துறக்க வல்லேன் அல்லன்' என்று பட்டினத்தார் பாடினார். சுந்தரரின் காதலையும், பரவையாரின் காதலையும் அடுத்தே, நரம்பு முறுக்கேறிய இளமையில் இல்லத்தில் இருந்து கொண்டே கட்டிய மனைவியிடமே வைராக்கியம் காட்டியவரின் சரிதை வருகிறது. உடலால் மட்டுமின்றி உள்ளத்தாலும் அவர் மனைவியைத் தீண்டவில்லை. இத்துணை பெருமைக்குரிய அவரைப் பற்றிப் பாடிய சுந்தரர் 'குயவனார்' என்று ஏன் அவரைக் குறிப்பிட வேண்டும்' என்ற கேள்வி எழலாம். இதே பெயருள்ள வேறொரு நாயனார் சரித்திரமும் பெரிய புராணத்தில் உள்ளது. ஆதலால்தான் இவரைப் பற்றிக் குறிப்பிடும்போது குலம் கொடுத்துப் பாடினார் சுந்தரர். திருநீலகண்ட நாயனார் திசை நோக்கித் தொழுதால் அருள் கிடைக்கும்.

**வேதியர் தில்லை மூதூர்**
**வேட்கோவர் குலத்து வந்தார்;**
**மாதொரு பாகம் நோக்கி**
**மன்னுசிற் றம்பலத்தே**
**ஆதியும் முடிவும் இல்லா**
**அற்புதத் தனிக் கூத்தாடும்**
**நாதனார் கழல்கள் வாழ்த்தி**
**வழிபடும் நலத்தின் மிக்கோர்.**

மண்பாண்டம் செய்வோரை மதுரைப் பக்கத்தில் வேளார் என்று கூறுவார்கள். மக்களுக்கு உபசாரம் செய்யும் மரபு அது. அந்த மரபில் வந்த திருநீலகண்ட நாயனார் வேதியர் நிரம்ப வாழும் தில்லை மூதூரில் வாழ்கிறார்.

நாம் எல்லோரும் நலமாகத்தான் வாழ விரும்புகிறோம். ஆனால் எது நலம் பயக்கும் என்பதை நன்கு உணரவில்லை. உண்பது நலம் என்றால் எந்த விலங்குதான் உண்ணாமல் இருக்கின்றது? குழந்தைகளைப் பெறுவதா நலம்? பன்றி, நாய், பூனை முதலிய உயிர்கள் நிரம்பக் குட்டிகளை ஈனுகின்றன. ஆகவே, உணவு, உறக்கம், மக்கட்பேறு முதலியவைகளைப் பெறுவது நலமன்று.

உடைந்து போன கண்ணாடித் துண்டுகளையும், வளையல் துண்டுகளையும் பொறுக்கி எடுத்துச் சட்டைப் பையில் போட்டுக் கொண்டு, பெரிய ஐசுவரியம் என்று எண்ணி மகிழ்வர் சிறுவர். அவர்களது அச்செயலைக் கண்டு நாம் நகைக்கின்றோம். ஆனால் சிறு குழந்தைகள், அவற்றை உயர்ந்த பொருட்களாகவே கருதுகின்றன. அறிவு முதிர்ந்த பின் அவற்றை மதிப்பதில்லை. இப்போது நாம் பொன்னையும் பொருளையும், பட்டையும் பெரிதாகக் கருதி அவற்றைப் பேணி மகிழ்கின்றோம். அப்பர் பெருமான் திருப்புகலூரில் உழவாரப் பணி செய்தார்.

**செம்பொன்னும் நவமணியும்**
**சேணிளங்க ஆங்கெவையும்**
**உம்பர்பிரான் திருமுன்றில்**
**உருள்பருக்கை யுடன்ஒக்க**
**எம்பெருமான் வாகீசர்**
**உழவாரத் தினிலேந்தி**
**அம்பலர்மென் பூங்கமல**
**வாவியினில் புகஎறிந்தார்.**

பொன்னையும் நவமணிகளையும் அப்பெருமானார் மதித்தாரில்லை. உழவாரப் படையில் எடுத்துக் குளத்தினில் எறிந்தார். புல்லோடும் கல்லோடும் பொன்னோடும் மணியோடும் சொல்லோடும் வேறுபாடில்லாத நிலையில் அவர் விளங்கினார்.

பொன்னைக் கண்டும் மயங்காத அவர் விண்ணிலிருந்து மின்னற் கொடிபோல் இறங்கிய பெண்ணைக் கண்டு மயங்கினாரில்லை.

ஆகவே பொன்னோடு வாழ்வதும், பெண்ணோடு வாழ்வதும் நலமன்று. பொன்னும் பெண்ணும் பெருந் துன்பங்களைத் தருவதைக் கண்கூடாகக் காணலாம். பதினாயிரம் பொன்னைச் சட்டையில் வைத்தவனுக்கு உறக்கமேது? அமைதி ஏது? (தொடரும்)

# ஜேய் கொண்டு ஸ்நானம் செய்யும் ஒவ்வொரு முறையும்

## உங்கள் சருமத்துக்கு மென்மை, ஒளி, கவர்ச்சி ஆகியவை கிட்டுகின்றன

ஜேய் அழகு சாதன சோப் சரும துவாரங்கள் அனைத்தையும் சுத்தப்படுத்தி, சருமத்தை மிருதுவாக்குகிறது. ஜேய் கொண்டு ஸ்நானம் செய்யும் ஒவ்வொரு முறையும் உங்கள் சருமத்துக்கு மென்மை, ஒளி, கவர்ச்சி ஆகியவை கிட்டுகின்றன. பளபளக்கும் ரேக்கு 'ராப்ப'ரின் காரணமாக அதில் அடங்கியுள்ள மனோகர மல்லிகை நறுமணம் நிலைத்து வீசுகிறது.




டாடா தயாரிப்பு

உங்கள் எழில் பெருக

# ஜேய்

அழகு சாதன சோப்

Bensons/ITJS-107-Tam



## பதினாறும் பெற்று வாழ்க!

முன்காலத்தில் பெரியோர்கள் ஆசிர்வதிக்கும் பொழுது, 'பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க' என்று வாழ்த்துவர். 'பதினாறும்' என்றால் கீழ்க்கண்ட பதினாறு செல்வங்களையும் பெற்று வாழ்க என்று அர்த்தம்:

1. புகழ் 2. கல்வி 3. ஆற்றல் 4. வெற்றி 5. நன்மக்கள் 6. பொன் 7. நெல் 8. அழகு 9. பெருமை 10. ஆயுள் 11. நல்லூழ் 12. இளமை 13. அறிவு 14. துணிவு 15. நோயின்மை 16. நுகர்ச்சி.

தகவல்: எஸ். கோவிந்தராஜன், மதுரை

## தள்ளாதவன்!

'ஒரு சமயம் கி. வா. ஜ. வீட்டுக்குச் சென்று பேசி விட்டு, வந்த வள்ளியப்பா வாசலிலிருந்த டாக்ஸியில் ஏறிக் கொண்டார். டாக்சி உடனே புறப்படாமல் கொஞ்ச நேரம் 'மக்கர்' செய்தது. வழியனுப்பி வைக்க வெளியே வந்த கி. வா. ஜ. அவர்கள், "என்ன சார், வண்டியைத் தள்ளிவிடட்டுமா?" என்று கேட்டார்.

அதற்கு வள்ளியப்பா, "அதெல்லாம் வேண்டாங்க. நீங்க சும்மா இருங்க. உங்களுக்கு எதற்குச் சிரமம், இந்த வயதிலே போய்? இதோ ஸ்டார்ட் ஆயிடும்" என்று சொன்னார்.

உடனே கி. வா. ஜ. கேட்டார்: "என்ன சார், நான் என்ன தள்ளாதவனா?"

தகவல்: அன்பு நாராயணன்

## பொற்கொடி வந்தாள்!



ஒரு மனிதன் சந்திர மண்டலத்துக்கு அனுப்பப்பட்டான். அங்கே காற்றின் அழுத்தம், நில அமைப்பு, தட்ப வெப்ப நிலைபோன்ற ஜீவாதாரப் புள்ளி விவரங்களைச் சேகரித்துக் கொண்டு, இரு வார காலத்தில் அவன் தன் 'ஸ்புட்னிக்'கில் பூமிக்குத் திரும்பி வந்தான்.

அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. புத்தி பேதலித்துப் பைத்தியமே பிடித்து விடும் போலாகி விட்டது. அவன் இங்கே இல்லாத அந்தப் பதினான்கு நாட்களில், உலகத்தார் அணு ஆயுதப் போரை நடத்தி அடியோடு மாண்டு போயிருந்தார்கள். சலனமற்றுக் கிடக்கும் இப் பூமண்டலத்தில் இவன் ஒருவன்தான் மனிதப் பூண்டோ?

அவனுக்குத் துக்கம் தாளவில்லை. தற்கொலை செய்து கொள்ளத் தீர்மானித்து நச்சு மாத்திரையைக் கையில் எடுத்தான். அப்பொழுது என்ன ஆச்சரியம்! அவனை நோக்கி ஒரு மனித உருவம் நடந்து வந்தது. அது பெண்ணென்று தெரிந்ததும் அவனுக்கு வாழ்க்கையில் ருசி தட்டியது. அந்த உருவம் நெருங்கி வரவர அது யாரென்று தெளிவாக விளங்கியது. அவனுடைய மனைவி! அடுத்த கணம் அவன் அந்த நச்சு மாத்திரையை 'லபக்'கென்று விழுங்கிவிட்டான்...! —ரதன்.

# சோக கீதம்!

எஸ். எஸ். எல். சி. பரீட்சையில் பெயிலான ஓர் அப்பாவி மாணவன் கீதம்:



நூலிருக்கும் நோட்டிருக்கும் பலனிருக்காது
பரீட்சைகளில் கேள்வி வரும் நினைவிருக்காது
விதவிதமாய்க் கேட்டிருக்கும் எழுத வராது
எழுத வரும் கைகளுக்கும் துணிவிருக்காது.

மண் நிறைந்த மண்டையிலே கற்பனை ஓடும் - பாதி
நினைவுவந்து மறுபடியும் பேப்பரை நாடும்
வட்ட நிலா வான்வெளியில் பரவசம்தேடும் - வாங்கும்
வட்ட எண்கள் மனத்தினிலே போர்க்களமாகும்!

—பரணி



## வழி என்ன ?

1. தைரியமிக்க தீரனாக வேண்டுமா ?
2. தேர்வில் வெற்றிபெற வேண்டுமா?
3. பள்ளிக்கூடத்தில் உங்கள் பையனுக்கு இடம் கிடைக்க வேண்டுமா ?
4. வீடுகட்ட, கல் கிடைக்க வேண்டுமா?
5. பசியெனும் பிணி நீங்கவேண்டுமா?
6. தினசரி உங்களைப் பலர் தேடி வர வேண்டுமா ?

இவற்றுக்கெல்லாம் என்ன வழி ?

(விடை 42-ஆம் பக்கம் பார்க்க)

## ஓர் மேடையின் கதை!



பெரிய மந்திரி வந்த போது அவர் சொற்பொழிவாற்றுவதற்காகப் பெரிய பிரசங்க மேடை ஒன்று கட்டப்பட்டதாக இரண்டாயிரம் ரூபாய்க்குக் கணக்கு எழுதியிருந்தார்கள். ஆனால் கட்டப்பட்டதாகக் கூறப்படும் இடத்தில் மேடையோ வேறு எதுவுமோ காணப்படவில்லை. ஆடிட்டர் அதிகாரியைப் பார்த்து, "என்ன இது. மேடையையே காணோம். கட்டியதாகத் தப்புக் கணக்கு எழுதியிருக்கிறீர்களோ?" என்று காணாததைக் கண்டு பிடித்துவிட்டவர் போலக் கேட்டார்.

அதற்கு அதிகாரி, "ஏனய்யா, அவசரப்படுகிறீர்கள்! அடுத்த பக்கத்தைப் பாருங்கள். அந்த மேடையை இடித்துவிட்டதற்கு ஏற்பட்ட செலவும் எழுதப்பட்டிருக்கிறது" என்று கூறினார். பாவம் ஆடிட்டர்! அவரால் என்ன செய்ய முடியும்?

- முல்லை வழுதி

## துணுக்குகள்!

● பாரதம் ஓர் ஆண்டு முழுவதும் உற்பத்தி செய்யும் வாகனங்களை ஒரே நாளில் செய்து முடித்து விடுகிறது, மேற்கு ஜெர்மனியில் உள்ள "போக்ஸ் வாகன்" மோட்டார் தொழிற்சாலை!

ஆதாரம்: காமர்ஸ்.



● "வெற்றிக்கான மிகப் பெரிய தேவை வெற்றிபெற வேண்டுமென்ற தீர்மானம்தான்!"

- ராய் தாம்ஸன் (பிரிட்டிஷ் பத்திரிகை அதிபர்)

● "விஞ்ஞானி + அரசியல்வாதி = 0"

('பிரிட்டிஷ் கற்பனை' என்ற புத்தகத்திலிருந்து)



● "முன்-பின் தெரியாத நண்பனைவிட நன்கு அறிமுகமான எதிரி மேல்."

- எர்னஸ்ட் ஹெமிங் வே. 'தகவல்: மீனாட்சி ராமகிருஷ்ணா'

## நேருவைப் 'போர'டித்த மனிதர்!



நேருவைப் பார்க்கத்தான் தினந்தோறும் யாராவது பிரமுகர்கள் வந்தவண்ணம் இருப்பார்களே! அப்படி வருபவர்களின் பேச்சு 'போர'டிக்க ஆரம்பித்தால் உடனே நேரு, இரண்டு கைகளையும் குவித்துக் கொண்டு விரல்களோடு விரல்கள் தாளமிட்ட வண்ணம் கூரை முகட்டைப் பார்க்கத் தொடங்கி விடுவாராம். 1951ம் வருஷம் அமெரிக்கக் காங்கிரசில் உறுப்பினராயிருந்த இளைஞர் ஒருவர் புதுதில்லியில் நேருவைச் சந்திக்க வந்திருந்தார். அவரிடம், நேருவின் பழக்கத்தை அறிந்து வைத்திருந்தவர்கள் எச்சரிக்கை கொடுத்திருந்தனர்.

அந்த இளைஞரும் நேருவை அலுவலகத்தில் சந்தித்தார்; பிறகு பேசலானார். ஆனால் பத்து நிமிடங்கள்கூட ஆகவில்லை. அதற்குள்ளேயே நேரு விரல்களைக் கொட்டிக் கொண்டே வந்திருந்தவரின் தலைக்கு மேலே கூரையை வெறித்துப் பார்க்க ஆரம்பித்துவிட்டார். வந்தவருக்கு நிலைமை புரிந்துவிட்டது!

இந்த நிலைமைக்குள்ளானவர் வேறு யாருமில்லை; சிறந்த பேச்சாளர், எழுத்தாளர் என்றெல்லாம் புகழ்ப் பெற்று, பின்னாளில் அமெரிக்க ஜனாதிபதியாகிப் பெருமை பெற்ற கென்னடிதான்!

- தகவல் பஷிராஜன்

# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இம் மாதிரி அபாயக் குறிகளை அசட்டை செய்யாதீர்கள்:



★ கேசம் குறைதல்

★ மெழுக்கென்ற, துவண்ட ரோமம்



இளமையில் வழுக்கை
இந் நிலை ஏற்படுவதைப் பெரும்பாலும்
தடுத்திருக்க முடியும்.

கேசம் குறைதல், ரோம உதிர்வு ஆகியவை உங்களைப் பாதித்தால் இன்றே ப்யூர் சில்விக்ரின் உபயோகிக்கத் தொடங்குங்கள். உங்கள் ரோமத்திற்கு ஆக்கம் தரும் பதினெட்டு அமினோ-அமிலங்கள் யாவும் அடர்வான நிலையிலே செறிந்துள்ளது ப்யூர் சில்விக்ரின். உச்சந் தலையிலே அழுத்தித் தேய்த்தால் ப்யூர் சில்விக்ரின் மயிர்க்கால்களை ஊடுருவி, நீடித்த நலனைக் கேசத்திற்கு மீட்டுக் கொடுக்கத் தேவைப்படும் இயற்கையான ஊட்டத்தை வழங்குகிறது.

ஆல் அபௌட் ஹேர் (ALL ABOUT HAIR) என்ற, படங்கள் கொண்ட இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினீர்களானால் இவ் விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-1, சில்விக்ரின் அட்வைசரி சர்வீஸ், தபால் பை 727, பம்பாய் 1.

# Silvikrin

**சில்விக்ரின் -கேச ஆரோக்கியத்திற்கான வழி**




**ப்யூர் சில்விக்ரின்**

கேசக் கோளாறுகளின் சிகிச்சைக்கானதொரு தீவிர குணம் செறிந்த தயாரிப்பு. ஒரு மாத சிகிச்சைக்குப் போதுமானது.

**சில்விக்ரின் ஹேர் டிரஸ்ஸிங்**

நாள் முழுதும் உங்கள் கேசத்தைப் பாங்காகப் படியவைத்திருக்கும். கேசக்கோளாறுகள் ஏற்படாமல் தடுக்கப் போதுமான ப்யூர் சில்விக்ரின் அடங்கியது



# அமெரிக்காவில் பார்த்திபனும் பரந்தாமனும்!

தொழில் துறை வளம் கண்டறிய எந்தப் பார்த்திபனோ அல்லது உயர் கல்விக்காக எந்தப் பரந்தாமனோ அமெரிக்கா போயிருக்கும் செய்தி அல்ல இது! காண்டீபம் பிடித்த பார்த்திபனும், கீதோபதேசம் செய்த பரந்தாமனும்தான் ஜாம் ஜாம் என்று நியூயார்க் நகரத்துக்குப் போயிருக்கிறார்கள்!

வியப்பாக இருக்கிறதல்லவா விஷயம்?

லிமிடெட் எடிஷன் கிளப் (The limited edition club) என்ற நியூயார்க் நகரப் புத்தக நிறுவனம் ஒன்று சமீபத்தில் பகவத் கீதையை 'ஒரு ராஜாங்கப் போர்' (A battle Royal) என்ற தலைப்பில் பார்ப்பவர்கள் பிரமிக்கும் வண்ணம் வெளியிட்டிருக்கிறது. இதில் ஆங்காங்கு பதினைந்து வண்ணப் படங்களையும் சேர்த்திருக்கிறார்கள்.

பகவத் கீதைக்குச் சித்திரங்கள் தீட்டுவதற்கான அதிருஷ்டத்தையும், அவற்றைக் கண்டு ஆயிரக்கணக்கான ரசிகர்கள் மனம் விட்டு அளித்த பாராட்டுதல்களையும் பெற்றவர் சென்னை நகரைச் சேர்ந்த ஒரு பெண்மணி! அவர்தான் ஓ. ஜி. ஸ்ரீமதி.



கண்காட்சியில் ஸ்ரீமதியின் ஓவியங்களில் ஒன்று.



'ஃபோலிக்ஸ் காலரி'



கண்காட்சியில் அமெரிக்க மாதர்களிடம் ஸ்ரீமதியின் ஹாஸ்யம் சிரிப்பை எழுப்புகிறது.

❀❀❀❀

"இந்த 'லிமிடெட் எடிஷன் கிளப்' நிறுவனத்தாரை உங்களுக்கு முன்பே தெரியுமா?"

"பகவானின் ஆக்ஞை அவர்கள் மூலமாக எனக்கு வந்தது என்றுதான் சொல்வேன். அந்த நிறுவனத்தைப் பற்றி எனக்கு அதற்கு முன் ஒன்றும் தெரியாது. அவர்களின் இந்தியப் பிரதிநிதிகள் என் ஓவியங்களைப் பார்த்துவிட்டுத் தங்கள் அபிப்பிராயத்தைத் தலைமைப் பீடத்துக்குத் தெரிவித்திருக்கலாம். என்னுடைய ஓவியங்களின் கண்காட்சிகள் அப்போது சென்னை, தில்லி முதலிய இடங்களில் நடந்தன. அதற்கு மேல்தான் அவர்கள் எனக்குக் கடிதம் எழுதினார்கள்."

"அவர்கள் வேண்டுகோள் உங்கள் மனத்திலே எத்தகைய உணர்ச்சியைத் தோற்றுவித்தது?"

"ஒரு பக்கம் பெருமையாக இருந்தது. ஆனால் அதே சமயம் இன்னொரு பக்கத்தில் பயமாகவும் இருந்தது. காரணம், ராமாயணம், பாகவதம், பாரதம் போன்ற காவியங்களுக்குச் சித்திரங்கள் தீட்டுவது சுலபம். அவைகளில் சம்பவங்கள்தான் பிரதானம். ஆனால் பகவத்கீதை அந்த ரகத்தைச் சேர்ந்ததில்லை. அது ஒரு தர்ம உபதேச காவியம். உபதேசத்தைச் சித்திரமாக மாற்றுவது அவ்வளவு சுலபமான வேலை இல்லையே! ஆனாலும் ஒப்புக் கொண்டேன். அவர்கள் கடிதம் 1959ம் ஆண்டில் நான் இங்கிலாந்தில் இருந்த போது கிடைத்தது. நான் தாய்நாடு திரும்பி ஓவியங்கள் தீட்டிப் பெரியவர்களின் அனுமதியும் ஆசியும் ஒப்புதலும் பெற்று அனுப்பி வைப்பதாகப் பதில் எழுதினேன். அதன்படி ஊர் திரும்பி, பகவத்கீதை மூலத்தையும், அதற்கான பலரின் விளக்கங்களையும் பல தடவைகள் படித்துவிட்டுச் சித்திரங்கள் வரைய ஆரம்பித்தேன். பதினைந்து படங்களையும் போட எனக்கு ஒரு வருட காலம் தேவையாக இருந்தது."

**"இந்தப் புத்தக ஸ்தாபனத்தைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்."**

"நம் நாட்டில் புத்தகங்கள் படிப்பது பொழுதுபோக்கின் கீழ்தான் வருகிறது. ஆனால் அநேகமாக வெளிநாடுகளில் உணவு, உடை, இருப்பிடம் ஆகியவற்றுக்கு எவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கிறார்களோ, அத்தனை முக்கியத்துவம் புத்தகம் படிப்பதற்கும் கொடுக்கிறார்கள். நல்ல புத்தகங்களை வாங்கிப் பரம்பரைச் சொத்தாக நிலைக்கச் செய்கிறார்கள்.

"நியூயார்க் மாடிசன் அவென்யூவிலிருக்கும் இந்த 'லிமிடெட் எடிஷன்' ஸ்தாபனத்துக்குப் பிரதான அங்கத்தினர்கள் சுமார் ஆயிரத்து ஐந்நூறு பேர்கள் இருக்கிறார்கள். முதலில் விலை உயர்ந்த ரகத்தில் புத்தகங்களைத் தயார் செய்து இவர்களுக்கு விநியோகிக்கிறார்கள். அதற்கப்புறம் இவர்களுடன் தொடர்பு கொண்ட ஹெரிடேஜ் கிளப் (Heritage club) என்ற குழுவில் சுமார் முப்பத்தி ஆறாயிரம் அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். கொஞ்சம் விலை குறைந்த பதிப்பாக வெளியிட்டு இவர்களுக்கு வழங்குகிறார்கள். அப்புறம்தான் பொதுமக்களுக்கான மலிவு விலைப் பிரசுரங்கள். பல பாஷைப் புத்தகங்களை ஆங்கில மொழி பெயர்ப்புடன் வெளியிடுகிறார்கள். இதிலே ஒரு விசேஷம் என்னவென்றால் கிரேக்கப் புத்தகமென்றால் அதைக் கிரேக்க நாட்டிலேயே தயாரிக்கிறார்கள். இந்த பகவத்கீதை அதே போல டாடா நிறுவனத்தைச் சேர்ந்த பம்பாய் அச்சகம் ஒன்றில் தயாராயிற்று. தேவநாகரி லிபியில் மூலம். சர் எட்வின் ஆர்னல்ட் 'த சாங் ஸெலெஸ்டியல்' (The song celestial) என்ற தலைப்பில் எழுதிய ஆங்கில மொழிபெயர்ப்பு, என்னுடைய சித்திரங்கள், தமிழ்நாட்டு முன்னாள் கவர்னர் ஸ்ரீ ஸ்ரீ பிரகாசாவின் முன்னுரை. புத்தகத்துக்கான பேப்பர் மாத்திரம் அமெரிக்காவிலிருந்து அனுப்பி வைத்தார்கள்.

"புத்தகம் முடிவடையும் தருவாயில் நான் நியூயார்க்கில் இருந்தேன். அட்டைக்கான டிசைனை என்னையே தயாரிக்கச் சொன்னார்கள். நம் நாட்டுப் பட்டுத் துணியில் டிசைன் போட்டு அதன்படி தயாரிக்கக் கொடுத்தேன். பழங்காலச் சுவடிகளையெல்லாம் துணியில்தானே கட்டி வைப்பார்கள்? அந்த மரபின்படி புத்தகத்தை வைக்கத் துணி ஒட்டப்பட்ட அட்டைப் பெட்டி டிசைனுக்கும் யோசனை சொன்னேன். அதன் மேல் தங்க எழுத்துக்களில் 'ஓம்' என்ற பதம் தேவநாகரி லிபியில் பொறிக்கப்பட்டது."

**"உங்கள் அமெரிக்க விஜயத்துக்கு இந்த ஸ்தாபனம் வழி கோலியதா?"**

"இல்லை. இல்லை! 1963ம் ஆண்டில் என்னுடைய சில அமெரிக்க நண்பர்களின் விடா அழைப்பின்பேரில் எட்டே டாலர் மூலதனத்துடன் நியூயார்க் போய்ச் சேர்ந்தேன். எனக்குத்தான் ஓவியக் கலையுடன் கர்நாடக, ஹிந்துஸ்தானி இசையிலும், வீணை, சித்தார், தபேலா வாத்தியங்களிலும் ஈடுபாடு உண்டே! என்னுடைய ஓவியங்களுக்குத் துணையாக என்னுடன், வீணை, தம்புரா, சித்தார் எல்லாமே வந்தன. மூன்றே மாதம் தங்கப் போன எனக்கு அங்கு மூன்று வருட கால வாசம் கிடைத்தது. என்னுடைய ஓவியங்களைக் கண்டு ரசித்த 'ஆர்ட் ஸ்டுடென்ட்ஸ் லீக்' என்ற கலை வளர்ச்சி ஸ்தாபனம் எனக்கு ஓராண்டு கால ஸ்காலர்ஷிப் அளித்து ஓவியத் துறையில் பல நவீன ஆராய்ச்சிகளுக்கு வசதி செய்து கொடுத்தது. ஓவியம் தீட்டாத நேரங்களில் இசையை நாடுவேன். வீணை அமெரிக்கர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்துகிறது. மனிதக் குரலுடன் அதிக உறவு கொண்ட ஒரே வாத்தியம் என்று புகழ்கிறார்கள்."

**"நீங்கள் சம்பிரதாய ஓவியக் கலையின் உபாசகராயிற்றே! அதை அமெரிக்கர்கள் விரும்பி வரவேற்கிறார்களா? இது மாடர்ன் ஆர்ட் மௌசுயுகம் ஆயிற்றே."**

"நம்முடைய மரபு வழிவந்த கலைக்கு அங்கு நல்ல வரவேற்பு இருக்கிறது. அதை நன்றாக ரசிக்கிறார்கள். அப்படி ரசிப்பவர்கள் மனம் விட்டுப் பாராட்டுகிறார்கள். நம் நாட்டைப் போல் நன்றாக இருப்பதை நன்றாக இருக்கிறது என்று ஒப்புக் கொள்ள அவர்கள் தயங்குவதில்லை; பயப்படுவதில்லை. எதையும் 'இது என்ன பிரமாதம்?' என்று அலட்சியப்படுத்தி ஒதுங்குவதுமில்லை. தங்களுக்கு லயிப்பு ஏற்படும் விஷயங்களைப் பற்றித் துருவித் துருவிக் கேட்டுத் தெரிந்து கொள்கிறார்கள்.

"நியூயார்க் ஐந்தாவது அவென்யூ உலகத்திலேயே ஒரு நாகரிகமான கடைத் தெரு. பெரிய பெரிய வியாபார ஸ்தாபனங்கள் அங்குதான் இருக்கின்றன. அங்குள்ள 'போன் விட் டெல்லர் ஸ்டோர்' நிர்வாகத்தினர், அவர்களுடைய கடையின் எட்டு கண்ணாடி ஜன்னல்களை என் ஓவியங்களால் அலங்கரிக்கும்படி என்னை நாடி வந்து கேட்டார்கள். ஒவ்வொன்றும் எட்டடி உயரம், நாலடி அகலம். அங்கு தங்கள் திறமையைக் காண்பிக்க ஒரு சதுர அடி இடமாவது கிடைக்குமா என்று பல பிரபல ஓவியர்கள் துடித்துக் கொண்டிருப்பது பற்றி நான் கேள்விப்பட்டிருந்தேன். அங்கு நான் தீட்டிய எல்லா ஓவியங்களுமே அசல் இந்திய பாணி! அவர்கள் திருப்தியும் மகிழ்ச்சியும் அடைந்தனர்."

**"நியூயார்க் நகரில் உங்கள் ஓவியங்களின் கண்காட்சிக்கு ஏற்பாடு செய்தீர்களா?"**

"எதிர்பாராத அதிருஷ்டம் என்னை நாடி வந்தது. ஆர்ட் காலரிகளை நாடி ஓவியர்கள் காத்திருப்பதற்குப் பதிலாக இரீன்விச் அவென்யூவிலுள்ள ஃபோனிக்ஸ் ஆர்ட் காலரி என்னை நாடி வந்தது. அந்தக் காலரி மேற்பார்வையாளர் ஹெரிடேஜ் கிளப் அங்கத்தினர். கீதைப் புத்தகத்திலுள்ள என் சித்திரங்களைப் பார்த்து விட்டு, நான் அமெரிக்கா வந்திருப்பதைத் தெரிந்து கொண்டு என்னிடம் வந்தார். என் ஓவியங்களைக் கொண்டு 'தனி மனிதர் கண்காட்சி' ஒன்று நடத்த விரும்புவதாகச் சொன்னார். ஒப்புக் கொண்டேன். நூற்றுக்கணக்கான மைல்களுக்கு அப்பாலிருந்து எல்லாம் ரசிகர்கள் வந்து கண்டு ரசித்தார்கள்.

''இந்தக் கண்காட்சி முழுக்க முழுக்க என்னுடைய திட்டப்படி நடந்தது. கண்காட்சிச் சாலையின் நடுவே, நிற்கும் நிலையில் சரஸ்வதியின் உருவம். இந்த சரஸ்வதி சித்திரம் உருவானதே ஒரு கதை.

''ரசிகமணி டி. கே. சி. அவர்கள் குற்றாலத்தில் வசித்த காலத்தில் நானும் என் குடும்பத்தினரும் அடிக்கடி அங்கு போய் அவரைச் சந்திப்பது வழக்கம். அப்படி ஒரு தடவை போனபோது ரசிகமணி பெருந்தேவனார் பாரதத்துக்கு விளக்கம் கொடுக்க ஆரம்பித்திருந்தார். முதல் பாட்டு ஸரஸ்வதி ஸ்தோத்திரம். அந்தப் பாடலே உணர்ச்சி வசப்பட்டு அவர் பாடிய போது நான் கண்களை மூடிக் கொண்டு மெய்ம்மறந்து நின்றேன். 'சரஸ்வதி சித்திரம் மனத்திலே உருவாகிறதாக்கும்' என்று சிரித்துக் கொண்டே ரசிகமணி கேட்டார். அவர் கேள்வியே என் ஆவலேத் தூண்டியது. சில மாதங்களில் அந்த சரஸ்வதி ஓவியத்தைத் தீட்டி அவரிடம் காண்பித்தேன். அதே ஓவியம்தான் போனிக்ஸ் காலரியில் பிரதான ஓவியமாக நின்றது.

''அமெரிக்க மியூசியங்களை அலசிப் பார்த்துப் பழங்காலப் பாரத நாட்டு வெண்கலக் குத்துவிளக்குகளைக் கொண்டு வந்து இருபக்கமும் ஏற்றி வைத்தேன். நல்ல பிளேவுட் பலகையில் காவி பூசி அதன் மேல் பளிச்சென்று மாக்கோலம் இட்டேன். நான்கு அமெரிக்க சிநேகிதிகளுக்கு நம் பாணியில் புடவை கட்டி வருவோரை வரவேற்க நிறுத்தினேன். அந்த வரவேற்பையும், தொடர்ந்து மூன்று வாரங்கள் நடந்த அந்தக் கண்காட்சியையும் பலர் ரசித்தார்கள்.''

ஃ ஃ ஃ

மூன்று நாட்கள் அமெரிக்காவில் தங்கிவிட்டு வருபவர்கள்கூட 'எஸ்' (Yes) என்ற உச்சரிப்புக்கும் பதிலாக 'ய்யா' (Yeah) என்று ஆட்டுக்குட்டி கத்துவதுபோல ஸ்டைலாக உச்சரிக்க முயலும் இந்த நாட்களில் மூன்று வருடங்கள் அங்கு தங்கிவிட்டு வந்திருக்கும் ஸ்ரீமதி அவர்கள் இன்னமும் ஸ்பஷ்டமாக 'எஸ்' என்றுதான் உச்சரிக்கிறார்! அயல்நாடுகளுக்குச் செல்ல எல்லாருக்கும் வாய்ப்புக் கிட்டிவிடுவதில்லை. வாய்ப்புக் கிட்டிச் செல்பவர்கள் அனைவருமே பாரதத்தின் பெருமையைப் பரப்பத் துணை புரிந்து விடுவதுமில்லை. 'இவர் நமது மரபையும் பண்பையும் எங்கும் உயர்த்தி நிலை நிறுத்தக்கூடியவர்' என்ற உறுதி ஸ்ரீமதியுடன் சில நிமிஷங்கள் பேசிக் கொண்டிருந்தாலே நமக்கு ஏற்பட்டுவிடுகிறது.

— மேனு





## "தி செவன்த் டான்"

'கொரில்லா யுத்தம்' என்ற வார்த்தைகள் நாம் இந் நாட்களில் அடிக்கடி கேள்விப்படும் ஒன்று. அந்தக் கொரில்லா யுத்தம் என்பதுதான் என்ன என்று நன்முகப் புரிந்துகொள்ள ஆசை உண்டானல் இந்தப் படத்தை ஒரு முறை அவசியம் பார்க்க வேண்டியதுதான்.

மலேயச் சூழ்நிலையிலே பயங்கரவாதிகளைப் பகைப்புலனுகக் கொண்ட கதை. காதலும் உண்டு, மோதலும் உண்டு. கானகத்துச் சூழலிலே கைகலப்பும் உண்டு.

வண்ணப் படமாக வெளிவந்துள்ள இந்தப் படத்திலே, மலேயக் காடுகள் அற்புதமாகச் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன.

பயங்கரவாதிகளின் இயக்கங்களில் சம்பந்தப்பட்டவளாகக் கருதப்படும் கதாபாத்திரம் ஏற்றிருப்பவர் காபுஸைன் என்னும் நடிகை. பயங்கரவாதிகளின் தலைவனுக வரும் ஜப்பானிய நடிகர் டெட்சுரோ தம்பா, தமது முப்பத்தெட்டாவது வயதுக்குள் இருநூறு ஜப்பானியப் படங்களில் முக்கிய பாகங்கள் ஏற்றுப் பண்பட்டவர். நடிப்பு சிறக்கக் கேட்பானேன்? காபுஸைன், வில்லியம் ஹோல்டன் — இவர்களின் நடிப்பு மனத்தை நிறைக்கிறது. எண்ணங்களை முக பாவத்திஞல் அழகுற வெளியிடுகிருர்கள்.

சுருங்கச் சொல்லப் போனல், மைக்கேல் கியோன் எழுதிய (The Durian Tree) நவீனம் உயிருள்ள பாத்திரங்களைப் பெற்று ஒரு துளி இரத்தம் சிந்தாமலே அந்தப் பழைய காலத்து ரத்தக் களறி நினைவுகளை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது.

உங்கள் உயில்களை அடை வதினால் யாருக்காவது பெருத்த லாபம் கிடைக் குமா?

லாபமில்லாமலா திருடுவாங்க? அதை வைச்சுக்கிட்டு ஏங் கிட்ட பயமுறுத்திப் பணம் பறிக்கலாமே.

நியாயம்தான்.

பெரியவரே, உங்க உயில் நகல்களைத் திருடிய வன் வெளியிலிருந்து வரவில்லை. இங்கேயேதான் இருக்கிறான் அந்தத் திருடன்.

அதெப்படி? நீங்க என்னபுதிர் போட றீங்களா?

இப்படிச் சிங்காரம் உறுதியாகக் கூறுவதற்கான காரணத்தை உங்களால் ஊகிக்க முடிகிறதா?

நீங்கள் யாரை ரொம்பவும் நம்பிக்கையானவன் என்று நினைத்திருந்தீர் களோ அதே முனியாண்டி தான் இந்தத் திருட்டை நடத்தியிருக்கிறான்.

சிங்காரம் முனியாண்டியைக் குற்றவாளி யாக்கியதற்கான காரணங்கள் என்ன என் பதை உங்களால் சொல்லமுடியுமா? 72ம் பக் கத்தில் சிங்காரம் சொல்வதைப் பாருங்கள்?

சிங்காரம் தன் முடிவைக் கூறிக் கொண்டிருந்த அதே வேளையில்...

சிங்காரம்! பின் றில்... ஒதுங்கிக் கொள்...

குற்றம் வெளிப்பட்ட கோபத்தில் முனியாண்டியின் ஆத்திரச் செய்கை அவனுக்கே தீங்காக முடிந்தது.

பாவம்... அந்த



# கார் பந்தயம்!

எஸ். பத்மாவதி

"ஞாயிற்றுக்கிழமை முழுவதும் இந்த டாக்டர் வீட்டு வராந்தாவிலேயே கழிந்து விடுமோ?" என்று பெருமூச்செறிந்தபடி உட்கார்ந்திருந்தேன். எனக்கு முன்னால் காத்திருப்பவர்களின் எண்ணிக்கை... அப்பாடா.. ஒரு பெரிய 'க்யூ'தான். எப்படியும் இன்று டாக்டரைப் பார்த்தே ஆக வேண்டும். குறைந்தது இரண்டு மணி நேரமாவது காக்க வேண்டும் போல் இருக்கிறதே!

என் பார்வை டாக்டர் வீட்டுக் காம்பவுண்டுக்குள் நுழைந்து கொண்டிருந்த ஆளின் மேல் விழுந்தது. சோர்ந்து கிடந்த என் மனம் ஒரு நிமிஷத்தில் குதூகலத்துடன் குதித்தது.

என் பழைய கல்லூரி நண்பன். 'பெட் பாலு....'தான் அங்கு வந்து கொண்டிருந்தான். வாயைத் திறந்தால்... "வருகிறாயா பந்தயம்?" என்று சவால் விடும் வீரன் பாலுவுக்கு நாங்கள் தந்த பட்டப் பெயர்தான் அவனை 'பெட் பாலு'வாக மாற்றி விட்டது. ஆனால் ஒன்று.... கடந்த வருடங்களில் அவன் பந்தயம் கட்டி.... அதாவது என்னிடம் தோற்றுப் போன நாட்களே கிடையாது.

இப்பொழுது நான் என் பர்ஸைத் தடவிப் பார்த்ததில் நியாயம் இருக்கிறதல்லவா.......?

"பெரிய கைராசிக்காரர் மட்டுமில்லே.... மகாயோக்கியர்டா, இந்த டாக்டர்! பணக்காரராகட்டும்... ஏழையாகட்டும், 'க்யூ' வரிசைப்பிரகாரம்தான் உள்ளேவந்தாகணும். இதோ பாரேன், அந்த மரத்தடியிலே, ஒரு பெரிய கார் நிற்கிறதே.... அதுலே வந்த மகராஜன் யாராயிருந்தாலும், இந்தக் 'க்யூ'வில்தான் உள்ளே போகணும்....." என்றவன் சிறிது நேரம் காரையே உற்றுப் பார்த்தான்.

பிறகு, "புது சவர்லே... கார்... பிரமாதமா இருக்கு....." என்றான்.

நான் இடைமறித்து, "சவர்லே இல்லேடா.... ஸ்டுடிபேகர்....." என்றேன்.

"பெட்டுடா.... ஐந்து ரூபாய்... இது சவர்லேதான்......!"

"அடி சக்கை! ஏண்டா, பாலு! நீ பேச ஆரம்பிச்சு ஐந்து நிமிஷங்களாச்சே. இன்னும் பந்தயம் கட்டலேயே, பாவம், என்ன உடம்போன்னு கவலைப்பட்டேன்.... என் கவலே இப்பத்தான் தீர்ந்துதுடா."



"அடேய்.... சோமு. பேச்சை மாத்தாதே.....! பந்தயம்னு பந்தயம்தான். நான் சவர்லேங்கிறேன்......!"

நான் சிறிது திகைப்புடன் அவனை உற்றுப் பார்த்தேன். பிறகு மெலிந்த குரலில், "அது ஸ்டுடிபேக்கர்தாண்டா....." என்றேன்.

பாலு நாற்காலியைத் தள்ளிக் கொண்டு படபடப்பாக எழுந்தான். படிகளைத் தாண்டி.... மரத்தடிக்குச் சென்று, காரின் பின்னால் எழுதியிருந்த எழுத்துக்களை உற்றுப் பார்த்தான். அடுத்த நிமிடம் அவன் முகம் தொங்கிற்று. திரும்பி வந்து தன் பர்ஸைத் திறந்து ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து என் கையில் திணித்தான்.

பிறகு இழந்த உற்சாகத்தைத் திரும்பப் பெற்றுக் கொண்டவன் போல் பாலு நிமிர்ந்து அந்த வராந்தாவிலிருந்த நோயாளிகளைக் கண்ணோட்டமிட்டான்.

"டேய்.... சோமு. நம்ம 'டேர்ன்' வர இன்னும் நேரமிருக்கு. அது வரை பொழுது போக..... இன்னொரு சிறிய பந்தயம்...."

நான் திகைப்புடன் பாக்கெட்டைத் தடவுவதைப் பார்த்த பாலு சிரித்துக் கொண்டே, "பயப்படாதேடா, அழுமூஞ்சி! நம்மகிட்டே கொஞ்சம் இருக்கு. வேணும்னு கைமாத்தாகத் தரேன். அப்புறம் திருப்பித் தரலாம்....." என்றவன், உற்சாகத்துடன், "டேய், சோமு! இங்கே இருபது பேர் உட்கார்ந்திருக்காங்க... அதுலே.... இந்தக் காருக்குச் சொந்தக்காரன் யாராயிருக்கும்னு சொல்லுவியா? அதுதாண்டா, பந்தயம். பத்து ரூபாய்டா.....!" என்றான்.

நான் திகைப்புடன் அவன் முகத்தையே உற்றுப் பார்த்தேன்.

சிறிது நேரத்தில், "டேய், சோமு! அதோ, பாருடா! அந்த ஜரிகைக் கரை, அவர்தாண்டா. ஐ-ஆம் ஷ்யூர்....." என்றான்.

நான் அவன் காட்டிய பக்கம் திரும்பினேன். முகம் உடல் எல்லாம் தினத்தாளில் மறைந்திருக்க அவருடைய ஜரிகை வேஷ்டி மட்டும் பளிச்சென்று கண்களில் பட்டது. நான் மெதுவாக, "இல்லேடா..." என்றேன்.

"டேய், சோமு! பத்து ரூபாயைத் தயாராக எடுத்து வைச்சுக்க.... டாக்டர் வீட்டுக்கு ஜரிகை வேஷ்டி கட்டிண்டு வர்றவன்.... காரிலே வராமல் எதுலேடா வருவான்.....?" என்று பாலு உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்த போதே... பட்டென்ற சத்தத்துடன் ஜரிகை வேஷ்டி ஆசாமி பேப்பரை மேஜை மேல் போட்டார். கைக் கடிகாரத்தை ஒரு நிமிடம்




மனைவி : பத்துப் பதினேஞ்சு மாலே போட்டிருக்காங்க, அவங்களைப் போய் இப்படித் திட்டறீங்களே?

கணவன் : நான் முப்பது மாலேகளுக்கு ரூபா கொடுத்திருந்தேனடி !

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

உற்றுப் பார்த்தார். வராந்தாவில் தமக்கு முன்னுல் உள்ளவர்களை எண்ணுவது போல் கண்களை ஓடவிட்டார். அடுத்த நிமிடம் ஏதோ முணு முணுத்துக் கொண்டே கால்களில் செருப்பை மாட்டிக் கொண்டு எங்களைக் கடந்து படிகளில் இறங்கினர்.

''டேய்.... டேய்.... பாருடா!'' என்று பாலு சொல்லிக் கொண்டிருக்கும் போதே அவர் கார் நிற்கும் பக்கத்துக்கு எதிர்த் திசையில் இறங்கி மறைந்தார்.

நான் திரும்பிப் பாலுவைப் பார்த்த போது அவன் ஓர் அசட்டுச் சிரிப்புடன், ''சேச்சே...! அவன் ஜரிகை வேஷ்டி...., என்னை ஏமாத்திடுத்துடா....'' என்று கூறிக் கொண்டே பர்ஸிலிருந்து பத்து ரூபாயை எடுத்துத் தந்தான். ''ஆளைப் பார்த்து மோசம் போகக் கூடாது....'' என்று கூறிக் கொண்டே அந்த வரிசையின் நடுவில் கண்களைச் செலுத்தினன்.

''அதோ..... அந்தப் பரட்டைத் தலை பையன் இல்லே.... அவன்தாண்டா கார் ஓனர் ! இந்தக் காலத்திலேதான் பெரிய மனுஷா வீட்டுப் பிள்ளைகள் எல்லாம் பரட்டைத் தலையோடு காரை எடுத்துண்டு சுத்தறது. பாஷனுச்சே!''

''ஏண்டா.... திரும்பவும் பந்தயமா?''

''ஆமாண்டா, அழுமூஞ்சி சோமு! டாக்கிடம் போக நம்ப 'டேர்ன்' வரதுக்குள்ளே உன் பர்ஸைக் காலியாக்க வேண்டாம்? எடு, பத்து ரூபாய்.''

பத்து ரூபாயை எடுத்தது நானில்லே, பெட் பாலுதான்! சில விஞடிகளில் அந்தப் பரட்டைத் தலையும் கார் சொந்தக்காரன் இல்லை என்று நிருபணமாகி விட்டது.

ஆவேசம் வந்தவன் போல் பாலு, ''டேய், சோமு! உனக்காச்சு... எனக்காச்சுடா.... இந்தத் தடவை எனக்கு 'சக்ஸஸ்' நிச்சயம். அதோ, பாருடா! அந்த வேடி தாண்டா ஓனர்.... பைத்தியம் மாதிரி இது வரை ஏதேதோ உளறித் தோற்றுப் போனேன்'' என்ருன்.

''டேய், பாலு.... இன்னிக்கு உனக்கு ராசி சரியில்லே. பந்தயம் போதும்!''

''ஏண்டா, நான் அதுக்கெல்லாம் பயப்படற ஆள் இல்லேடா.... நிச்சயம் அந்தப் பெண்தாண்டா..... கார் சொந்தக்காரி. நீ அதுக்குள்ளே பயந்து உன் அழுமூஞ்சித்தனத்தைக் காட்டாதேடா.....'' என்று ஆவலுடன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவள், 'டக் டக்'கென்று ஹிஹெ பாத அணிகள் சப்திக்க வீதியை நோக்கி நடந்தாள்.

''சனியன் பிடிச்சவ....!'' — முணு முணுத்தான் பாலு. ''டேய், இனிமேல் பெட் அஞ்சு ரூபாய்தான். நம்ப பர்ஸ் இளைச்சுப் போச்சு'' என்று பரிதாபமாகக் கூறினன்.

பாலு மேலும் இரு முறைகள் ஐந்து ஐந்து ரூபாய் தோற்ருன்.

''டேய், என் லைஃப்லே.... இதுதாண்டா முதல் தடவையா உன்னிடம் தோற்றது...'' என்ருன் பாலு கம்மிய குரலில்.

''டேய், என் லைஃப்லே இதுதாண்டா முதல் தடவையா நான் உன்னிடம் ஜெயிச்சது.... இவ்வளவு வருஷமா என் மனசுலே இருந்த ஏக்கம் தீர்ந்ததுடா!'' என்றேன். பர்ஸில் பணத்தை மடித்துத் திணித்துக் கொண்டிருந்தபோது, ''சார், நீங்க வாங்க!'' என்று டாக்டர் அறையிலிருந்த அட்டெண்டர் பையன் குரல் கொடுத்தான். நான் எழுந்து சென்றேன். நான் திரும்பியதும், பாலு சோர்வுடன் டாக்டர் அறையில் நுழைந்தான்.

பாலு வரும் வரை நான் வெளியில் காத்துக் கொண்டிருந்தேன். பத்து நிமிடங்களுக்குப் பிறகு அசட்டுச் சிரிப்புடன் பாலு வெளியில் வந்தான்.

''டாக்டருக்கு அடுத்த தடவை பணம் தரேன்னு சொல்லியாச்சு....'' என்றவன் தயக்கத்துடன், ''டேய்! பஸ்ஸுக்கு உன்னிடம்தான் கடன் கேக்கணும்...'' என்ருன்.

''யானைக்கும் அடி சறுக்கும்டா!'' என்றேன் நான்.

பாலுவின் முகம் திடீரென்று பிரகாசம் அடைந்தது. ''ஏண்டா, சோமு! என் மூளையைப் பார்.....! இது டாக்டர் கார் தாண்டா. அதனுலேதான் மரத்தடியின் நிழலில் இவ்வளவு நேரம் நிற்கிறது.''

''டேய்.... பாலு....! பெட் கட்டாதே... உன்கிட்டே பணம் இல்லே.... இது டாக்டர் கார் இல்லவே இல்லே.....'' என்றேன் நான்.

''ஏண்டா, பர்ஸிலே பணம் இருக்கிற தென்பிலே பேசறையா? பின்னே யார் காருடா? உன்னையும் என்னையும் தவிர இங்கு யாரும் இல்லே. நம்ப ரெண்டு பேரில் யாராவதுதான் கார் ஓனராக இருக்கணும். வேறு வழியில்லே....'' என்று கேலியாகச் சொன்னவன், ''உனக்கும் எனக்கும் எந்த மாமனர்டா கார் வாங்கி வைச்சிருக்கான்?'' என்று ஏளனமாக முடித்தான்.

''ஏண்டா, நல்ல மாமனர் வாங்கி வைச்சிருக்கார்டா.... வா.... வா... ஏறு ஏறு!'' என்று சொல்லிக் கொண்டே 'பேண்ட்' பாக்கெட்டிலிருந்து கார் சாவியை எடுத்த என்னைப் பார்த்து, 'பெட் பாலு' சிலையாகச் சமைந்து நின்ருன்.


டாக்டர் துரைரங்கசாமி

# மலேசியா மாநாடு

ஏப்ரில் 18ம் தேதி பகல் 11-30 மணிக்குக் கருத்தரங்கின் இரண்டாவதிருக்கை தொடங்கிற்று. பேராசிரியர் ஜான் வில்லியோமா தலைமை வகித்தார். பல்கலைச் செல்வர் தெ. பொ. மீ. விவாதத் தலைமை தாங்கித் தம்முடைய எழுத்துரையை முதலாவதாக அரங்கேற்றினர். 'தொல்காப்பியத்தின் இலக்கியக் கோட்பாடு' பற்றியதே அது.

ஒலியியல், இலக்கணம், செய்யுளியல் பற்றிய நூலே தொல்காப்பியம். செய்யுள், வழக்கு என மொழியை அது இருவகைப் படுத்துகிறது. இந்த நூலின் குறிப்பிடத் தக்க சிறப்பு, இலக்கியத்தை அகம் புறம் என இருவகையாகப் பிரித்துணர்த்துவதே யாகும். அவற்றை இயற்கை நிலைச் செய்யுள், உணர்வுறு நிலைச் செய்யுள் என்று கூறுவதையே நான் விரும்புவேன். மனித வாழ்வின் சத்தியத்தின் உட்கருவே அகம் அல்லது காதல். அகத்துறைச் செய்யுளில் பெயரே கூறலாகாதென்பது விதி. புறம் அல்லது இயற்கை நிலைச் செய்யுள் என்பது, அகம் அல்லது உணர்வுநிலையை வெளிப்படக் காட்டுவதேயாம். அகம் களவு—கற்பு என இரு பிரிவாகிறது. களவு என்பது மணத்தின் முன் கொள்ளும் காதல்; கற்பு என்பது மணந்தபின் அமையும் காதல். புறம் என்பது போரில் பெறும் வெற்றியை மட்டும் குறிக்கவில்லை. மனித வாழ்வின் இயற்கை நிலையை வெல்வது, புலவரால் பாராட்டப் படும் அளவு மேம்பட்டு வாழ்வது, மனித குலம் தன்னை மறக்கவொண்ணாதபடி அருஞ் செயல் ஆற்றுவது போன்றவை. எல்லாம் புறத்துள் அடங்கும்.

1. எழுத்து, 2. மாத்திரை, 3. அசை, 4. சீர், 5. அடி, 6. யாப்பு, 7. மரபு, 8. தூக்கு, 9. தொடை, 10. நோக்கு, 11. பா, 12. அளவு, 13. திணை, 14. கைக்கோள், 15. கூற்று, 16. கேட்போர், 17. களன், 18. காலம், 19. பயன், 20. மெய்ப்பாடு, 21. எச்சம், 22. முன்னம் 23. பொருள் 24. துறை, 25. மாட்டு, 26. வண்ணம், 27. வனப்பு — முதலிய செய்யுளுறுப்பு விவரங்களை யெல்லாம் கூறி மேலை நாட்டுத் திறனாய்வாளர்களான எலியத், ரிச்சார்டு போன்றவர்களின் விளக்கங்களுடன் ஒப்பிட்டுத் தொல்காப்பியத்தின் இலக்கியக் கோட்பாட்டினைத் தெளிவுபடுத்தினர்.

அடுத்து மதுரைத் தமிழ்ச் சங்கத் தலைவர் திரு பி. டி. ராஜன், 'தமிழ் மொழிக்கும் இலக்கியத்துக்கும் சங்கங்களின் கொடை' என்ற தமது எழுத்துரையை வழங்கினர்.

தொல்காப்பியத்தைப் பல்வேறு கோணங்களிலிருந்து திருவாளர்களான திருஞான சம்பந்தம், யாழ்ப்பாணத்து ரெவ. எச். எஸ். டேவிட், இலங்கை வி. செல்வநாயகம் முதலியோர் ஆய்ந்த எழுத்துரைகள் வழங்கப்பட்டன.

பின்னர், 'எட்டுத் தொகையில் பழந் தமிழ் இலக்கியக் கோட்பாடுகள்' என்ற தமது எழுத்துரையை வாசித்தார்:, டாக்டர் மு. வரதராசன்.

''அகத்துறைப் பாடல்கள் நாடகநெறியில் அமைந்திருக்கின்றன. படைக்கும் கவிஞன் கரந்து நிற்க, அவர் படைத்த பாத்திரங்கள் நன்கு இயங்குகின்றன. தலைவன், தலைவி, தோழி முதலிய பாத்திரங்கள் மலை, காடு, வயலிடம், கடற்கரைப் பகுதிகளில் வாழும் சாதாரண மக்களே. அவர்களின் பெயர்கூடப் பாடல்களில் காணப்படவில்லை. உணர்ச்சியும், கற்பனையுமே காணப்பட வேண்டும் என்ற நோக்கந்தான் இந்த இலக்கிய மரபு தோன்றக் காரணமாக இருந்திருக்க வேண்டும்.

உணர்ச்சிகளை நேர்முகமாகச் சொல்லி உணர்த்துவதைவிட உள்ளுறை உவமம், இறைச்சி வாயிலாகச் சுட்டிக்காட்டும் பழைய மரபு சிந்திக்கத் தக்கது. மக்களுடன் பேசுவதைப் போலவே விலங்கு, பறவை, தாவரம், மேகம் முதலியவற்றின் நெஞ்சொடு உரையாடும் பாங்கு அமையப் பாடும் இலக்கிய மரபு உணர்ந்து மகிழத்தக்கதாகும்.

புறத்துறைப் பாடல்களில் ஆற்றுப்படையும் கையறு நிலையும் சிறந்தவையாகும்.

கொடை வள்ளல்களை, புரவலர்களை அணுகும் புலவர்கள் அவர்களை நேர்முகமாகப் பாராட்ட மனம் தயங்கும் நிலை

சா. கணேசன்


பேராசிரியர் வி. ஐ. சுப்பிரமணியம்



Λ மலாய் நடனத்தில் ஒரு காட்சி



சீன நாடகத்தில் ஒரு காட்சி >

V தமிழ் நடன - நாடகத்தில் ஒரு காட்சி. ராமன், சீதை, இலக்குவன் மூவரும் குகன் செலுத்தும் படகில் ஆற்றைக் கடக்கின்றனர்.



பல இடங்களில் நன்கு புலனாகிறது. அதற்கு மாறாக, அவன் முன்னோர், அவன் நாடு, அவன் ஆறு முதலியவற்றைப் புகழ்கின்றமையைப் பரக்கக் காணலாம்.

''புலவர்களின் நெஞ்சம் இயற்கையழகில் தோய்ந்து மகிழ்வுற்றிருப்பினும் வெறும் இயற்கையை வருணித்துப் புனைந்துரைத்தலையே மேற்கொண்டொழுகினார்களில்லை. அதற்கு அக்கால மரபும், விதியும் இடந் தந்திருக்க மாட்டா. மக்களின் உணர்ச்சியும், வாழ்வுமே பாட்டின் உட்கருவாக அமைந்திருக்கின்றன'' என்பன போன்ற அருமைச் செய்திகளை வழங்கினார் திரு மு. வ.

பின்னர், 'மாபாரதத்தில் தமிழ்ச் செல்வாக்கு' என்னும் எழுத்துரையைக் கேரளப் பல்கலைக் கழகப் பேராசிரியர் வி. ஐ. சுப்பிரமணியம் வழங்கினார்.

''புனாவில் உள்ள பந்தர்க்கார் கீழைநாட்டு ஆராய்ச்சிக் கழகம் மாபாரதத்தைப் பதிப்பிக்கத் தொடங்கியது. இந்தியாவின் பல்வேறு பாகங்களிலிருந்தும் கையெழுத்து ஏடுகளைத் திரட்டினர். சுக்தாங்கர் என்பவர் அந்த விரிநிலை மாபாரதத்தின் பதிப்பாசிரியராவார். அப்பதிப்புக்கு அவர் பயன்படுத்திய ஏடுகளின் தொகை ஐம்பத்தொன்பது. அவற்றுள் முப்பத்துமூன்று தென்னாட்டிலிருந்து பெற்றவை. அவற்றுள் தஞ்சை சரஸ்வதி மஹால் நூல் நிலையத்திலிருந்து மட்டும் பெற்ற ஏடுகள் இருபது. இவற்றுள் மிகப் பல கிரந்த லிபியில் எழுதப்பட்டவை. மிக மிகச் சிலவே நாகர எழுத்திலும், தெலுங்கு எழுத்திலும் எழுதப்பட்டவை. அவருக்குக் கிடைத்த ஏடுகள் யாவற்றுள்ளும் தஞ்சையிலிருந்து பெற்ற ஏடுதான் அதிகச் செய்யுள்களையுடையது. அது கிரந்த லிபியில் எழுதப்பட்டதாகும்.

மிகப் பழைய ஏடுகள் நான்கு. ஒன்று தஞ்சை ஏடு. மற்றொன்று பிரோடாவிலிருந்து கிடைத்தது. மற்ற இரண்டு ஏடுகள் நேபாளத்திலிருந்து கிடைத்தவை. இந்த நான்கும் பதினாறும் நூற்றாண்டைச் சேர்ந்தவை.

மாபாரதக் கதை, சங்கப் புலவர்கட்கும் நன்கு தெரிந்தது. அவர்களுள் ஒருவர் பெயரே 'பாரதம் பாடிய பெருந்தேவனார்'. புறநானூறு, அகநானூறு, சிலப்பதிகாரம் ஆகியவற்றில் பாரதக் கதைக் குறிப்புகள்

கிடைக்கின்றன. பராந்தக வீரநாராயணன் (9ம் நூற்றாண்டு) இராசசிம்மன் (10ம் நூற்றாண்டு) ஆகியவர்களின் செப்பேடுகள் பாரதம் பற்றிப் பேசுகின்றன. அவற்றுள் சின்னமனூர்ச் செப்பேடு (இராசசிம்மன்) மாபாரதத்தைத் தமிழ்ப் படுத்திய செய்தியை அறிவிக்கிறது.

பாரதப் போரிலேயே தமிழ் மன்னர் பலர் கலந்து கொண்ட செய்தி கல்வெட்டுக்களில் காணப்படுகின்றன. இவற்றிலிருந்து தமிழகத்தில் மாபாரதம் பெருமதிப்புள்ளதாயிருந்தது தெள்ளிதிற் புலனாகும்.

பல்வேறு மூல ஏடுகளையும் ஒப்பு நோக்கும் போது ஏழு பிரிவுகளாக அவை அமைந்தன. ஒவ்வொன்றும் அந்தந்தப் பகுதிப் பண்பாட்டுக்கேற்பத் திருத்தப்பட்டிருந்தன. இந்தக் கண்டத்துக்கே பெயர் ஏற்படக் காரணமாயிருந்த பரதன் பிறப்பு வடஇந்திய ஏடுகளில் முறைக்கொவ்வாததாயிருக்கிறது. ஆனால் தமிழக ஏடுகளின்படி அரசாங்கப் புரோகிதர் வந்து துஷ்யந்தனுக்கும் சகுந்தலைக்கும் திருமணம் செய்து வைக்கிறார். இவ்வகை மாற்றம் பண்பாடு நோக்கிச் செய்யப்பட்டதேயாகும்.

பகாசுரனுடன் வீமன் போரிடுவது தென்னக ஏடுகளில் மட்டுமே காணப்படுகிறது. இலக்கிய நோக்கு இங்கே புலப்படுகிறது.

கதை சொல்லுவதைவிட, காப்பியப் பாத்திரங்களைப் பேச வைப்பதே சுவையூட்டுவதாகும். அந்த உத்தி தமிழ்க் காப்பியங்களில் கையாளப்படும். துவாரகையிலிருந்து கண்ணன் புறப்படும் காட்சி இதற்கு ஓர் எடுத்துக்காட்டேயாகும். இந்த உரையாடல் தென்னக ஏடுகளில் மட்டுமே காணக் கிடக்கிறது.

தமிழ் இலக்கியத்தில் காதலும் — போரும் நிறைந்து விளங்கும். அந்த நெறியும், நோக்கும் முறையும் மாபாரதத்தில் காணப்படுகின்றன என்றெல்லாம் கூறி அரிய உரை நிகழ்த்தினார் திரு சுப்பிரமணியம்.

பின்னர், 'தமிழ் இலக்கியப் பாடல்களில் நடைமுறை வழக்கு' என்ற எழுத்துரையைத் திரு எம். மனுவேல் வழங்கினார். இறுதியில் தனிநாயக அடிகள், 'தமிழ் இலக்கியக் கலை ஆய்வில் உள்நோக்கு' என்னும் எழுத்துரையை வழங்க இரண்டாவது இருக்கை நிறைவெய்தியது.

மீண்டும் 2-45க்கு மூன்றாவது இருக்கை கூடிற்று. பண்டித வித்துவான் லெ. ப. கரு இராமநாதன் செட்டியார் தலைமைதாங்கினார். இந்த ஓர் அவையிலேதான் எல்லாரும் முழுக்க முழுக்கத் தமிழில் உரையாற்றினர்.

டாக்டர் மொ. அ. துரையரங்கசாமி சிறப்புரையாளராக இருந்து தமது எழுத்துரையை வழங்கினார். 'உதியன் சேரல் பாரத காலத்தவனா?' என்ற வினாவை எழுப்பி, 'இல்லை' என்று முடிவு கூறினார். அவர் அம்முடிவுக்கு வந்த காரணத்தை அவர் வாய்மொழியாக நாமும் கேட்போம்.

''பழந்தொகை நூலான புறநானூற்றில் இரண்டாம் பாட்டுக்குரியவன் உதியன் சேரல். அவனே 'சுமார் 5,500 ஆண்டுகட்கு முற்பட்டவன்; பாரதப் போர் நடந்த காலத்தவன்' என்பர் தமிழறிஞர். அக்கூற்றுச் சரியா என்பதை ஆய்வதே இவ்வெழுத்துரை.

'ஐவரொடு சினைஇ, ஈர் ஐம்பதின்மரும் பொருது, களத்து ஒழிய, பெருஞ் சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்!'

என்று அப்பாடலில் முரஞ்சியூர் முடிநாகராயர் விளிக்கிறார். இப்பகுதிக்கு உரை ஆசிரியர், 'ஐவரும், நூற்றுவரும் போர்க்களத்தில் உயிர்விடும் வரை பெருஞ்சோறாகிய உண்டியை இரு படைகளுக்கும் வழங்கினன் உதியன் சேரல் ஆதன்' என்று விளக்கம் தருகிறார்.

இதிலிருந்து பாண்டவர் ஐவரும் துரியோதனன் முதலிய நூற்றுவரும் போரிட்ட காலத்தவன் இவன் என்று முடிவு செய்கிறார். இக்கருத்துக்கு அரணாகச் சிலப்பதிகாரத்துள் இரண்டிடங்களையும் குறிப்பர். அவற்றில் முன்பின் உணர்த்தப்படும் இரு நிகழ்ச்சிகளைக் கருத்துட் கொள்ளாமையால் அவற்றை அரண் செய்வனவாக முரண்படக் கொண்டு மயங்கினர் போலும்!

ஒன்று, கட்டுரை காதையில் பராசரன் வாய் மொழியாக வருவது. அவன் உதியன் சேரல் ஆதனுடைய கொடைத்திறம் கேட்டு, 'பல் யானைச் செல்கெழுகுட்டுவனைக் காண்பேன்' என்று கூறிச் செல்வதும் பின்னர் இமயவரம்பன் முதலியோரை வாழ்த்துவதும் கவனத்தில் கொள்ளப்பட்டால், இமயவரம்பன் தந்தையாய், சங்க காலத்து வாழ்ந்தவனாகவே உதியன் விளங்குகிறான்.

பிறிதொன்று வாழ்த்துரை காதையில் வருவது. 'ஓர் ஐவர் ஈர் ஐம்பதின்மருடன் எழுந்த போரில் பெருஞ்சோறு கொடுத்த உதியன்' எனப்படுகின்றவன், சங்க காலத்தில் இமயவரம்பனுடன் வாழ்ந்தவனாகவே புலப்படுத்திக் கொண்டிருக்கிறான். எனவே, சிலம்பில் காணப்படும் அவ்விரண்டிடங்களும் அரண் செய்யாதொழிகின்றன. மற்றொன்று நல்லதொரு வழிகாட்டியாக விளங்குகிறது. அது அண்மைக் காலத்தில் திரு ஐராவதம் மகாதேவன் கண்டுணர்ந்திய கல்வெட்டே. ஆறுநாட்டான் மலைக் கல்வெட்டாகிய அதனால், பதிற்றுப் பத்தில் உணர்த்தப்படும் சேரமன்னர் குடிவழி ஏற்றுக் கொள்ளப்பட வேண்டியதே என்பது உறுதியாகிறது.

அங்ஙனமாகில், உதியன் கொடுத்த பெருஞ்சோறு யாருக்கு? மாமூலனார் பாடிய படி இவர் நினைவாகப் பெருஞ்சோறளித்தானேயன்றி வேறன்று. இறந்தார்க்கு நீர்க்கடன் ஆற்றும் நெறியில் 'பெருஞ்சோறு' கொடுத்தான், அதுவும், சங்ககாலத்தில் என்று கொள்வதே பொருத்தமாகத் தோன்றுகிறது.

எனவே, உதியன் சேரல் ஆதன், பாரதப் போர் நடந்த காலத்தவனல்லன், சங்க காலத்தவனே என்பதுதான் சரி'' என்று முடித்தார் திரு துரையரங்கசாமி.

சிந்தாதிரிப்பேட்டை கல்யாணம் பெண்கள் உயர்நிலைப் பள்ளிக் கட்டிட நிதிக்காக **ஸ்ரீமதி சிவானந்த விஜயலக்ஷ்மியின்** சதுர்புஜ ராமாயண சங்கீத — உபன்யாஸம், பிரதி தினம் இரவு 7 மணிக்கு, பள்ளி விளையாட்டு மைதானத்தில் நடைபெறுகிறது. **ஸ்ரீ சீதாராம பட்டாபிஷேகம்** 10-7-66 ஞாயிறு மாலை 6 மணிக்கு.

## லண்டன் விநோதங்கள்

★ சென்ற ஏப்ரல் 28ம் தேதியன்று தான் லண்டனில் மிக உஷ்ணமான நாள் கடந்த இரண்டு ஆண்டுகளில்! உஷ்ணத்தின் அளவு என்ன தெரியுமா? 18 டிகிரி சென்டிகிரேட் (64°F) சென்னையில் குளிர் காலத்தில்கூட இவ்வளவு குறைவான உஷ்ணம் இருப்பதில்லை!

★ ஸால்போர்ட் ஹோப் ஆஸ்பத்திரியில் 6,50,000 பவுன் செலவில் புதிய மருத்துவ மனை ஒன்று கட்டியிருக்கிறார்கள். இங்கே வரும் வருங்காலத் தகப்பனார்களுக்குக் ''காத்திருக்கும் வேதனை''யைக் குறைப்பதற்காக ஒலிபெருக்கிகள் மூலம் இன்னிசை வழங்கப்படுகிறது.

இந்த மனையில் மற்றோர் வசதி-தாங்கும் சக்தியுள்ள தகப்பனார்கள் பிரசவ விடுதிக்குள்ளும் அனுமதிக்கப் படுகின்றனர்!

★ ''இங்கிலாந்தின் பொருளாதாரவாதிகள் கையில் அரசியல்வாதிகள் சிக்கித் தவிக்கிறார்கள்'' என்கிறார் புரொபஸர் கால்ப்ரெய்த்.

இந்தியாவில் அரசியல்வாதிகள் கையில் யார் யாரெல்லாம் தவிக்கிறார்கள் என்பது திரு கால்ப்ரெய்த் அறியாததல்லவே!

★ வியாபார ஸ்தாபனங்களின் திறமைக் குறைவு அதிகமாகி வருகிறது. ஒவ்வொருவருக்கும் தனிப்பட்ட குறிக்கோள் என்று ஒன்று இருப்பதில்லை.

சோதித்துப் பார்க்க விரும்புகிறீர்களா? உங்கள் ஊழியர்களிடம், ''இந்த ஸ்தாபனத்தில் உமக்குத் தரப்படும் சம்பளத்துக்கு நீர் எந்த வழியில் அருகதை உள்ளவர்?'' என்ற வாசகம் அடங்கிய சீட்டு ஒன்று கொடுத்துப் பாருங்கள் - என்கிறார் புரொபஸர் பீட்டர் ட்ரக்கர் என்னும் நிர்வாகத் துறை ஆராய்ச்சியாளர்! - மீனாட்சி கிருஷ்ணு

பின்னர் திரு க. ஆறுமுகம், 'இலக்கணமும் திறனாய்வும்' என்ற எழுத்துரையையும் திரு மெ. திருஅரசு 'வள்ளுவன் சமயம்' என்ற எழுத்துரையையும்; திரு ஏ. ந. வீரப்பன், 'மலாய் மொழியில் தமிழ்ச் சொற்களின் செல்வாக்கு' என்ற எழுத்துரையையும் வழங்கினார்கள்.

எழுத்துரையை முழுதும் படிக்க நேரம் இன்மையால் எல்லாரும் கருத்தை மட்டும் கூறிவிட்டு, ''பிறவற்றை எங்கள் எழுத்துரையில் கண்டு கொள்க'' என்று இடையிடையே கூறிக் கொண்டிருந்தனர்.

திரு ம. பொ. சிவஞானம் எழுந்து, ''ஏன், தமிழ்ப் பேச்சுக்களை மட்டும் படி எடுத்துக் கொடுக்கவில்லை? இதுவா தமிழுக்குச் செய்யும் சிறப்பு?'' என்று கேட்டார்.

தலைவர் என்ன செய்வார் பாவம்! திரு வி. ஐ. சுப்பிரமணியம் பதில் உரைப்பார் என்று கூறித் தப்பித்துக் கொண்டார் புத்திசாலித்தனமாக. ஆனால் திரு சுப்பிரமணியம் எழுந்து ''இங்கு எல்லாம் சீனர்களின் அச்சுக் கூடங்களே. இது முன்பே தெரிந்திருந்தால் தமிழ் எழுத்துரைகளைத் தமிழ் நாட்டிலிருந்தே அச்சடித்துக் கொண்டு வந்திருக்கலாம்'' என்று ஒருவாறு ஆறுதல் கூறினார்.

ம. பொ. சி.யா விடுவார்? ''இதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன்; மூன்று தமிழ்த் தினப் பத்திரிகைகள் நடக்கின்ற ஊரில் அச்சடிக்க வசதி இல்லை என்பதை நான் ஏற்க மாட்டேன்'' என்று வற்புறுத்திக் கூறியவர் மேலும், ''நடந்தது போகட்டும்; இதைக் கண்டிக்கவில்லை. திருத்தவே விரும்புகிறேன். இனியாவது எங்கட்கு எழுத்துரைகள் கிடைக்க ஏற்பாடு செய்யுங்கள்'' என்றார் மிகவும் பெருந்தன்மையுடன்.

தலைவர் பிறகு எழுந்து, ''மாநாடு முடிவதற்குள் தமிழ் எழுத்துரைகளை அச்சிட்டு வழங்க வேண்டும் என்பதே அவையின் ஒருமுக விருப்பம்'' என்று கூறி முடித்தார்.

அன்றிரவு ஒன்பது மணிக்கு 'திவான் பஹாசா தான் புஸ்தகா'வில் கலை விருந்து நடைபெற்றது. தமிழர்களும், சீனர்களும், மலாய்க்காரர்களும் போட்டி போட்டுக் கொண்டு அருமையான நிகழ்ச்சிகளைத் தயாரித்து நடத்திக் கண்ணுக்கும் செவிக்கும் நல்விருந்தளித்தனர்.

தமிழர்கள் பல பாடல்களைப் பாடி மகிழ்வித்ததுடன் ராமகாதை நடன நாடகத்தையும் நடத்திக் களிப்பூட்டினர்.

சீனர்களின் நடனம் கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. உடையழகைப் பாராட்டுவதா? அன்றி நடை அழகைப் பாராட்டுவதா? தேவலோகச் சூழ்நிலையை மிக எளிதாகக் கொண்டு வந்து விட்டனர் நாட்டியமாடியவர்கள். மலாய் நாட்டியத்தில் ஒரு வகை அமைதியும் குளுமையும் நிரம்பியிருந்தன. அதில் பங்கு கொண்டவர்கள் யாவரும் பூமி புத்திரர்களே. கலை விருந்துக்கும் பூமி புத்திரர்கள் பலர் வந்து பெருமக்கட்கும், நிகழ்ச்சிக்கும் சிறப்பூட்டினர்.

நிகழ்ச்சிகள் முடிந்த பின்னர் அருகே விருந்த கடேமாக்கான் சென்று நல்ல காப்பி அருந்திவிட்டு எங்கள் தங்கலை அடைந்தோம்.

'என்னய்யா! பூமிபுத்திரர்கள், கடேமாக்கான் என்றெல்லாம் புதிர் போடுகிறீயே?' என்று கேட்பது என் செவியிலும் படுகிறது. ஏற்கனவே நான் சொல்லவில்லையா, மலாய் மொழியில் தமிழ்ச் சொற்களும், தமிழ் வழி வந்த சம்ஸ்கிருதச் சொற்களும் ஏராளமாகக் கலந்திருக்கின்றன என்று? அப்படிக் கலந்த சொற்களை மலாய் மொழியாகவே கொண்டு பல புதுப் பெயர்களைச் சமைக்கிறார்கள். பூமி புத்திரா என்றால் நாட்டு மகன் என்பது பொருள். அந்நாட்டுக்கு உரியவர்களாக, அந்நாட்டிலேயே பிறந்தவர்களாக, அந்நாட்டிலேயே தலைமுறை தத்துவமாக வாழ்ந்து வரும் மலாய் மக்களே பூமிபுத்திரர்கள் எனப்படுவார்கள்.

கடே என்றால் கடைதான். மாக்கான் என்றால் உண்டி. கடேமாக்கான் என்றால் உணவுக் கடை என்பதுதான் பொருள்.

மணி இரவு பன்னிரண்டு; கண் சொக்குகிறது. உறங்கச் செல்வோம். (தொடரும்)



Pepsodent
Pepsodent




## 22

அத்தானின் உடல் நிலை முழுதும் குணமடைந்து அவரை வேலூருக்கு மீண்டும் அழைத்து வந்து கல்யாணி அத்தையின் மேற்பார்வையில் விட்டு விட்டு நாணா கோவை திரும்ப ஒரு மாதம் ஆகிவிட்டது. ஆம், கல்யாணி அம்மாளின் மேற்பார்வையில்தான். பங்களூரிலிருந்து புறப்பட்டுச் சென்னைக்கு அவள் வந்திருந்தாள். ஜெகுவின் கடிதம் அவளுடைய உள்ளத்தில் மூடிக் கிடந்த சகோதர பாசத்தைக் கிளறி விட்டு விட்டது. அதோடு வாய் ஓயாது சுந்தரியைத் திட்டிக் கொண்டிருந்தவள் இப்போது வாய் ஓயாது ஜெகுவைப் புகழ்ந்து கொண்டிருந்தாள். அப்படியென்றால் நாணாவின் விஷயத்திலும் அவள் மனம் மாறி விட்டது என்று தானே பொருள்?

ஜெகு ஒரு நாள் நாணாவிடம் சொன்னான்: ''ஜெயசூரியா இருக்கிறாளே, அவளுடைய நடனத்துக்காகவும், நடிப்புக்காகவும்தான் ஒப்பந்தம் செய்தேன். அவள் என்னடா வென்றால் லவ் ஐடியாவோடு பழக ஆரம்பித்தாள். 'கிப் கொய்ட்'னுட்டேன்'' என்றான்.

அது உண்மைதானோ என்னவோ! ஜெயசூரியாவை விலக்கியதில் கூடப் பெருமை இல்லை. விலக்கப்பட வேண்டிய பொருளும் உண்டு என்ற ஞானம் அவனுக்கு வந்ததே!

இதைக் கமலாவிடமும் சொல்லி விட்டான். அவனுக்குத்தான் ஒளிவு மறைவு என்பதே கிடையாதே!

அவள் என்ன செய்வாள்! 'ராமா!' என்று காதைப் பொத்திக் கொண்டாளாம்.

நல்ல காலம். அவனுடைய இரண்டாவது ஆசையை ஜெகு நிறுத்திக் கொண்டு விட்டான். ஏனோ அதை அவன் இப்போதெல்லாம் வெளியிடுவதில்லை. அதற்குக் காரணம் இருந்த

தென்பதை நாணு தெரிந்து கொள்ள நான் ஆகவில்லே. ஜெகுவின் உள்ளத்தில் மூன்றுவது ஆசை ஒன்று புகுந்து இரண்டாவது ஆசையை விழுங்கி விட்டது என்று தோன்றியது.

''வாஸ்தவம்தான், நார்யாணு... நான் இப்போது ஒரு பெண்ணுடன் பழகத் தொடங்கி யிருக்கிறேன்'' என்றுன்.

''இது புதிய செய்தி இல்லே'' என்று சிரித்தான் நாணு.

''அப்படியில்லே. இது புதிய, மிக மிகப் புதிய செய்தி. அபூர்வமான செய்தி.''

''எப்படியோ?''

''கேள். முதலாவதாக ஜெகுவின் இந்தப் புதிய காரிகை ஒரு தேவலோகத்துப் பெண்.''

''கனவு கினவு கண்டாயோ!''

''கரெக்ட். கனவேதான். நனவிலே இதைப் பார்க்க முடியாது. அவளுடைய அழகு புதிது. பேச்சு புதிது; பார்வை புதிது. எல்லாமே புதிது தான்.''

''ஜெகு, இப்படிப் புதுப்புது நட்புக்களே நீ எப்படிச் சேகரிக்கிறுய்?''

''நான் சேகரிப்பதாவது ஒண்ணாவது? மண்ணுங்கட்டி. இலேசாக ஒரு பரிச்சயம் ஏற்பட்டாலும் அதிலே ஈ மாதிரி ஒட்டிக் கொள்வது. பிறகு சூடு பட்டதும் ஓடுவது. இவ்வளவு தான் விஷயம். ஆனல் நார்யாணு, இவள் ஒரு வொண்டர்ஃபுல் அப்சரஸ். நான் இவளே என்னுடைய உயிருக்கும் மேலாக நேசிக்கிறேன்.''

நாணு சிரித்தான்.

''நீ சிரிக்கிறுய். உனக்கு என் மனசு புரியவே இல்லே'' என்றுன் ஜெகு ஆத்திரமையோடு.

''புரிகிறது ஜெகு. உன் வேகமும் ஈடுபாடும் எனக்கு இல்லேயே என்று தான் அழுவதற்குப் பதிலாகச் சிரிக்கிறேன்.''

''என்னவோ வேகம். ஆனல் இப்போது இதிலே நிச்சயம் அர்த்தம் இருக்கிறது, நார்யாணு. ஒரு மாற்றம் உண்டு கட்டாயமாக. நீ என்னே ஓரளவுக்கு உருவாக்கின மாதிரி இந்தப் பெண்ணும் என்னே உருவாக்குகிறுள்.''

''யார் அவள்?''

''பெயரைச் சொன்னல் உனக்கு விளங்குமா...?''

''விளங்கா விட்டாலும் பெயரையாவது தெரிந்து கொள்ளலாமல்லவா?''

''அவள் பெயர் பாருக்குட்டி.''

நாணு அதிர்ந்தே போனுன். பாருக்குட்டியா? 'இறைவா! அந்தக் குழந்தையை இந்த வெகுளியுடன் எங்கே எவ்வாறு கொண்டு சேர்த்தாய்? ஒரு சுழலிலிருந்து மற்ருெரு சுழலுக்கு அவளே மாற்றுகிறுயா? இந்த ஜெகுவின் தலே கீழ் அன்பு அவளுக்குப் பெரும் சோதனேயாக அல்லவா ஆகிவிடும்? ஒரு நொடியில் என்னேயே வீழ்த்திய அந்த வஞ்சனேயற்ற பிறவியை இந்தக் காதல் மன்னன் உணர்வானு? உணராத பிழைக்கு யார் பலியாகி, என்ன விபத்து நேருமோ!' நாணுவின் நெஞ்சு புலம்பிற்று.




''ஏன்? இதற்கும் ஏதாவது மறுப்புச் சொல்வாயோ?'' என்று முகம் சுளித்தான் ஜெகு.

''ஆமாம்'' என்றுன் நாணு.

''நீ சொன்னலும் இந்த ஒரு விஷயத்தில் ஜெகு உன் பேச்சைக் கேட்க மாட்டான்.''

''ஜெகு!'' என்றுன் நாணு தழுதழுத்த குரலில். ''பாருக்குட்டியை எனக்குத் தெரியும்.''

''நீ சர்வ வியாபியா என்ன? கோபாலேக் காட்டினுலும் தெரியும் என்கிறுய். பாருக்குட்டியின் பெயரைச் சொன்னலும் தெரியும் என்கிறுய். உனக்குத் தெரியாமல் எங்காவது ஓடினல்தான் என் விவகாரம் நடக்கும் போலிருக்கிறது.'' ஜெகு சிரித்தான்.

''அவள் ஒரு குழந்தை ஜெகு. ஒன்றும் அறியாத பிறவி.''

''யார் இல்லே என்ருர்கள்?''

# சோர்வா? சோம்பலா?
# அஜீர்ணமாக இருக்கலாம்

ஜீரணம் பாதிக்கப்பட்டால், வேலையில் ஈடுபாடு குறைகிறது. எரிச்சல் ஏற்படுகிறது. தலைக்குமேல் வேலை காத்திருக்கும்போது உங்களை அஜீர்ணம் பாதிக்க விடலாமா? ஹ்யூலெட்ஸ் மிக்சர் அருந்துங்கள். அது விரைவில் நிவாரணம் அளிக்கிறது. வலியுண்டாக்கும் அமிலங்களை அகற்றி, ஜீரண கோசத்திற்கு அதன் வேலையை சரிவர செய்வதற்கேற்ப பாதுகாப்பு அளிக்கிறது. ஹ்யூலெட்ஸ் மிக்சர் குழந்தைகளின் வயிற்று உபாதைகளுக்கும் நல்லது. வயிற்றுப் போக்கு இருந்தால் அபினி சேர்த்த ஹ்யூலெட்ஸ் மிக்சர் குணமளிக்கும்.






C. J. ஹ்யூலெட் & ஸன் (இந்தியா)
பிரைவேட் லிமிடெட், 86A தானியப்ப
நாயக்கன் தெரு, மதராஸ் 1

**ஹ்யூலெட்ஸ் மிக்சர் ஜீரணத்திற்குச் சிறந்தது**

''அவள் கணவன் மிகவும் பொல்லாதவன்.''

''உன் வாயால் இப்போதுதான் ஒருவனைக் கெட்டவன் என்று சொல்லியிருக்கிறாய்!''

''அது என் துர்ப்பாக்கியம் மட்டுமல்ல, ஜெகு. பாருக்குட்டியின் துர்ப்பாக்கியமும் கூட. அவளுக்கு நல்ல வாழ்வு கிடைக்க வேண்டுமானால் குஞ்சுராமனின் மனம் திருந்த வேண்டும்.''

''நான் திருத்துவேன். கவலைப்படாதே! உன் உபதேசமும் கோபாலின் துணையும் இருந்து விட்டால் இந்த ஜெகுவினால் சாதிக்க முடியாத காரியம் ஒன்று உண்டா?'' — ஜெகு சிரித்தான்.

'அட கடவுளே! கோபாலும் இவனுமாகவா குஞ்சுராமனைத் திருத்தப் போகிறார்கள்? இவர்களல்லவா முன்னர் திருந்த வேண்டியவர்கள்!' ஜெகுவை எவ்வாறு இந்த அபாயத்திலிருந்து தடுத்து நிறுத்துவதென்று நாணுவுக்குப் புரியவில்லை.

நல்லவேளையாக அன்று மாலையே பாருக்குட்டி வந்தாள். சென்னையிலிருந்து திரும்பிய பிறகு அவளை நாணு பார்க்கவே யில்லை. முன்போல் சிரிப்பும் பூரிப்புமாக இருந்தாள் அவள்.

''நாராயண், ஜெகுவை உங்களுக்குத் தெரியுமாமே?'' எடுத்த எடுப்பிலேயே கேட்டாள்.

''தெரியும்... உன்னைப் பற்றியும் அவன் என்னிடம் சொன்னான்'' என்றான் நாணு.

''என்ன சொன்னார்?''

''நீ தேவலோகத்துப் பெண்ணாம். உனக்காக அவன் உயிரையும் தருவானாம்.''

''ஏன்? அவருக்காக நான் உயிரைத் தர மாட்டேனா?''

''பாருக்குட்டி, உயிரைத் தருவதோ, தராமலிருப்பதோ நீங்கள் இருவரும் முடிவு செய்யக் கூடிய காரியமல்ல. உயிரைத் தந்தவனுக்கே அதை எடுத்துக் கொள்வதற்கு உரிமையும் அதிகாரமும் உண்டு. தவிர, பெண்ணாகப் பிறந்த உனக்கு உயிர் எது, உறவு எது, நட்பு எது, நடப்பு எது என்பது இன்னமும் தெரியவில்லை.'' நாணுவின் குரலில் அவளைக் கண்டிக்கிற பாங்கு வெளிப்பட்டது.

அவளுக்கு முகம் சுண்டி விட்டது. ''உக்கும்...கோபால் மாதிரியே நீங்களும் பேசறீங்க... ஆனால் எனக்குக் கோபாலைக் கண்டாலே பிடிக்கவில்லை'' என்றாள் பாருக்குட்டி.

நாணு சிரித்தான்.

''அது பேசற பேச்சும், பார்க்கிற பார்வையும்... தூ...!''

நாணு மீண்டும் சிரித்தான். போகிறது. இப்போதாவது அவனுடைய உண்மை உருவம் பாருவுக்கு விளங்கிற்றே!

''ஜெகு வரக்கூடாதாம். அவரோடு நான் பேசக் கூடாதாம். கோபால் சண்டை பிடிக்கிறது. இன்றைக்குக் குஞ்சுவும் அதுவுமா என்னை....'' அவள் அழுதே விட்டாள்.

கோபாலை உயர்திணையாக்கியே பேசிவந்த பாருக்குட்டி இப்போது அஃறிணையாகக் குறித்ததிலிருந்தே குஞ்சுராமனின் ஆண்மைக்குக் கிடைத்த அதே மரியாதை அவனுக்கும் வாய்த்துவிட்டதை நாணு புரிந்து கொண்டு விட்டான்.

''குஞ்சு அடித்தால் நான் பட்டுக்கொள்ளலாம். இந்தக் கோபால் எதற்காக என்னைத் தானில் கட்ட வேண்டும்?'' என்று பாருக்குட்டி கோபமாகக் கேட்டாள்.

அந்தக் கேள்வி அவனுக்கு எவ்வளவு உவப்பாக இருந்தது! தூங்கிக் கிடந்த அவளுடைய பெண்மை விழித்துக்கொண்டு விட்டதென்றே பூரிப்பு. கணவனின் உரிமைக்கு, அது நல்லதோ, கெட்டதோ, மதிப்பளிக்கிற தாய்க்குலத்தின் வெற்றி அது தான். அந்த மகிழ்ச்சி அவள் பட்ட அடியில் கனிந்து பழுத்தது.

''நீ அடிபட்டதும் நல்லதுக்குத்தான், பாருக்குட்டி!''

''உக்கும்.''

''உலகத்தில் அடிபட்டால்தான் உண்மை விளங்கும்!''

''எங்கே விளங்குகிறது? பொய்தான் பெரிதாக இருக்கிறது.''

''எது பொய்?''

''போங்கள், நாராயண்... இந்தக் கேள்விக்கு எனக்குப் பதில் தெரியாது... எது உண்மை என்று கேட்டால் சொல்வேன்.''

''நல்லதம்மா. எது உண்மை என்றுதான் சொல்லேன்.''

## எலிகளைக் கொன்ற அழகு!



பிலிப்பைன்ஸ் தீவுகளில் இருக்கும் சல மான்காவில் அண்மையில் ஓர் அழகுப் போட்டி நடந்தது. இதற்காகப் பல்லாயிரக் கணக்கான எலிகள் அவற்றின் உயிரை அர்ப்பணம் செய்திருக்கின்றன!

எப்படி?

அழகிப் போட்டி தேர்தலுக்குச் சில நாட்கள் இருக்கும் போது அந்நகர மேயர் அரிலியோ ஃபிரெஸ்ரில் ஓர் ஆக்ஞை பிறப்பித்தார். அதன்படி அந்த அழகிப் போட்டியில் போடப்படும் ஒவ்வொரு ஓட்டுடனும் ஓர் எலி வால் இணைக்கப்பட வேண்டும்! அப்பொழுது தான் அந்த ஓட்டு செல்லுபடியாகும். எலிகளின் எண்ணிக்கை பெருகித் தொல்லை மிகுந்திருந்ததால்தான் இந்த விசித்திரமான விதி.

முடிவு?

17,834 எலி வால்களுடன் மிஸ் கார்மலிடா காரானோ அழகியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். அடுத்து வந்த மிஸ் லொலிதா காரெகேவுக்கு 17,595 எலி வால்களும், மிஸ் எல்டா அண்டன்டோகனுக்கு 15,155 எலி வால்களும் கிடைத்தன. மொத்தம் கொல்லப் பட்ட எலிகள் 84,276! ஏ. கே. கந்தசாமி

ஆதாரம்: 'ஆசிய மாணவன்'

**வழி இவைதான் :**

1. மனைவியை எதிர்த்துப் பேசுங்கள்.
2. புத்திசாலி மாணவரின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு எழுதவும்.
3. பள்ளி மதிய உணவுத் திட்டத்துக்கு ஆறு மூட்டை அரிசி கொடுக்கவும்.
4. எலக்ஷன்தான் வருகிறதே. மீட்டிங்கில் பேசவும்.
5. நிறையச் சாப்பிடுங்கள் நினைத்தநேரத்தில்.
6. நிறையக் கடன் வாங்கவும். - மூர்த்தி

''ஜெகு என் மீது வைத்திருக்கும் அன்பு!''

''நீ பெண்பிள்ளை என்பது நினைவில் இருக்கட்டும்.'' நாணு கோபத்தோடு அவளைக் கண்டித்தான்.

பாருக்குட்டியின் விழிகளிலே கேலி கலந்த சீற்றம் கூடிற்று. இதுவரை கேலி அல்லது அழுகை என்ற இரு உணர்ச்சிகளே அவற்றில் தெறிக்கப் பார்த்திருந்தான் நாணு. சீற்றம்? ஊஹூம். இதுவே முதல் முறை. ''ஆண் பிள்ளைகளுக்கெல்லாம் புத்தி வேறு விதமாகப் போகாதோ நாராயண்?... பெண் பிள்ளையிடம் அன்பு காட்டுவது பாபமாக்கும்! எங்க தாத்தா என் மேலே உயிராயிருக்கிறார். நீங்கள் இருக்கிறீர்கள். ஜெகுவும் அன்பாக இருந்தால் அது மட்டும் வேறே. ஏன்?'' என்று கேட்டாள்.

நாணுவின் வாய் அடைத்து விட்டது. அவளுடைய கேள்வியில் ஒரு ஜெகுவுக்காக வாதாடுகிற பாருக்குட்டியைக் காணவில்லை. உலகம் முழுவதிலுமுள்ள ஆணினத்திடம் வெறுப்புற்ற அவளுடைய பெண் உள்ளம் கேள்வியைத் தொடுத்து விட்டது. வஞ்சனையும் கள்ளமும் அறியாத அவளுக்கு அவற்றை நாணுவே கற்பிக்கிறானே?

''சொல்லுங்க, நாராயண்!''

''என்ன சொல்வது? என்னால் எதையும் நம்பமுடிய வில்லையம்மா.''

''என்னிடம் கூட நம்பிக்கை இல்லையா, உங்களுக்கு?''

அவன் அவளையே பார்த்தான். ஆடாது அசையாது உற்றுப் பார்க்கும் அவளுடைய விழிகள் அவனைச் கட்டின. அவளைக் காப்பாற்றவா அவன் புறப்பட்டான்? யாரை யார் காப்பாற்றுவது?

''சொல்லுங்கள்...உக்கும்...ஏன் அப்படிப் பார்க்கிறீர்கள், நாராயண்?''

''பாரு, நீ இந்த உலகத்துப் பெண் இல்லை. தேவலோகவாசிதான். என்னை மன்னித்து விடு. என் சந்தேகம் அர்த்தமற்றது. ஜெகுவிடம் நீ கொண்டுள்ள அன்பு வாழ்க!'' என்றான்.

அப்பொழுது அவளுடைய உற்சாகத்தைப் பார்க்க வேண்டுமே! நாணுவுக்குக் கண்ணில் நீர் துளித்து விட்டது.

பாருக்குட்டி போனதும் அவனுடைய நெஞ்சு கனத்தது. இல்லை. இலேசாயிற்று. இல்லை. கனத்து இலேசாகி... இலேசாகிக் கனத்தது.

இது அல்லவா பெண்மை! அதற்குத் திரையிட்டு, நாணிட்டு, பூணிட்டு, உடைவிட்டுக் கள்ளமிட்டு, காவல் புரிகிற புன்மை எங்கே? பரவிப் பூரித்து, மலர்ந்து, மணம் வீசிச் சிரித்துச் சிந்திக்கிற அம்பலத்து மெய்க் கடத்து எங்கே? பெண்ணைப் பெண்ணாக வளர விடாத பாவத்தை ஆண்மை இல்லாத ஆணினம் ஏற்றே தீர வேண்டும். அவளை அவளாக வளர விடாமல் அவளை வேறொரு பொருளாக்க முயல்வது சரியில்லை என்றே நாணு எண்ணினான்.

''அவள் வந்திருந்தாளாமே?'' என்று கமலா கேட்டாள்.

''எவள்?''

''பாருக்குட்டி.''

''ஆமாம்.''

''ஜெகு இப்போது அங்கே சுற்றிக் கொண்டிருக்கிறாற் போலிருக்கிறது. இது ஒரு புது உறவு...''

''இல்லை, கமலா. இது பழைய உறவு. பிறவித் தொடர்புடைய பாசத்தின் உறவு. பாரேன். இந்தக் குழந்தையை அந்த வெகுளி உயிருக்கு மேலாகப் பூஜிக்கிறான்.''

கமலா அதைப் பார்க்க விரும்பாதவள் போல் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். அவளுடைய முகத்தில் பழைய வெறுப்பு படர்ந்தது. ஜெகுவின் மாற்றத்தை அங்கீகரித்து அவனுடைய கபடமற்ற பேச்சையும் ரசித்தவள் கடுகடுத்தாள் இப்போது.

''ஜெகுவை நம்புகிறாயா நாணு?'' என்று அவள் கேட்டாள்.

''பாருக்குட்டியை நம்புகிறேன், கமலா!'' நாணு பதில் சொன்னான்.

அவள் ஜெகுவையும் நம்பவில்லை, பாருக்குட்டியையும் நம்பவில்லை போலிருந்தது. முகத்தில் வெறுப்பு மட்டுமல்ல, வேதனையும் படரச் சும்மா இருந்தாள்.

அவளையே பார்த்த நாணுவுக்கு மெல்ல மெல்ல ஓர் ஐயம் — அது ஐயம்தானா? தெளிவா? — எழுந்தது. கமலாவின் இந்தக் கவலை, ஜெகு பற்றிய விசாரணை, பாருக்குட்டி பற்றிய சந்தேகம் அவனுக்கு ஒன்றை உணர்த்தியது. அப்படியும் இருக்குமோ? இது என்ன விந்தை!

''கமலா!'' என்றான்.

அவள் அவனுடைய குரலிலிருந்து அவனுடைய மனத்தைப் புரிந்து கொண்டாள் போலும்! வெறுப்பும் வேதனையும் படர்ந்த முகத்தில் நாணத் திரை கூடிற்று. கன்னம் சிவக்கத் தலை கவிழ்ந்தாள்.

''நீ.... நீ.... ஜெகுவை....?'' நாணு கேள்வியை முடிக்க இயலாமல் நிறுத்தினான்.

அவளும் அதை முடிக்க இயலாமல் திணறுபவள்தானே! தாழ்ந்திய முகத்தை எப்படி நிமிர்த்துவாள்? சரிந்த உள்ளத்தை எங்கே நிறுத்துவாள்?

பதில் கூறாமல் கமலா ஓடி விட்டாள் வெளியே.

நாணு திகைப்புற்றான். உடல் குளிர்ந்தது. உள்ளம் கட்டது. கண் பனித்தது. நா உலர்ந்தது.

கமலா ஜெகுவிடம் மனத்தைப் பறி கொடுத்து விட்டாள்! ஜெகுத் தடியனிடம்,



உங்கள் குழந்தைக்கு புட்டிப் பால் குடிப்பது மகிழ்ச்சிகரமாக்க

# எவர்ஃப்ளோ ஃபீடர்



எவர்ஃப்ளோ குழந்தைக்கு திருப்திகரமானது. இந்த சூப்பானின் அமைப்பு குழந்தைக்கு தாயின் நினைவையே தரும். அது மிருதுவாக இருக்கிறது. ஆகவே இது குழந்தைக்கு தாய்ப்பாலைக் குடிக்கும் சுகத்தை அளிக்கிறது.



எவர்ஃப்ளோ ஆரோக்கியமானது, அபாயமற்றது. ஒரே சீராக பால் வடிவதற்காக இது பிரத்தியேக டிசைனில் செய்யப்பட்டது. குழந்தை அதிகமாக காற்றை விழுங்குவதால் அஜீரணம் உண்டாவதை இது தடுக்கிறது. படகின் வடிவத்திலுள்ள புட்டியை உபயோகிக்கும் போது இந்த உபாதை உண்டாவது சகஜம்.



எவர்ஃப்ளோ சௌகரியமானது. இதன் வாய் அகலமாக இருப்பதால் பால் நிரப்பவும் கொதிக்கும் ஜலத்தில் போட்டு சுத்தம் செய்யவும் வசதியாக இருக்கிறது. எவர்ஃப்ளோ, வேலைபார்க்கும் தாய்மார்களுக்கு விசேஷமாக சௌகரியமானது. பிரயாணத்துக்கும் இது மிகவும் ஏற்றது. இதிலிருந்து பால் சிறிதுகூட ஒழுகாது.



எவர்ஃப்ளோ சிக்கனமானது. முற்றிலும் ஆட்டோமாடிக் முறையில் தயாரிக்கப்படும் ஒரே ஒரு ஃபீடர் இது மட்டுமே. இதன் பளிங்குபோல் தெளிமையான கண்ணாடி அதிககாலம் நீடிக்கிறது மற்றும் ஜலத்தில் போட்டு கொதிக்க வைக்கும் போது புட்டி உடைந்து போவது மிகவும் குறைகிறது.




வியாபார சம்பந்தமான விவரங்களுக்கு எழுதுங்கள்:

எவர்ஃப்ளோ ட்ரேடிங் கோ.

தபால் பெட்டி என் 1292, பம்பாய்-1

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ்:

ரெட்டார் மார்கெட்டிங் கம்பெனி லிமிடெட்

தபால் பெட்டி என் 644, பம்பாய்-1

உங்கள் குழந்தைக்குத் தாய்ப்பாலைக் குடிப்பது போன்ற மகிழ்ச்சியை அளிக்க

**எவர்ஃப்ளோ ஃபீடர்**

உபயோகியுங்கள்

JWT-ET-4093

அந்த உதவாக்கரை அபோக்கியனிடமா ! பெண்மையே, நீ ஒரு புதிர் அல்ல; மாயம். உலகில் எல்லாப் புதுமைக்கும், எல்லா உயிர்ப்புக்கும் நீயே காரணம் ஆகிறாய். நீ படர்வது உனக்கே தெரியாத இயற்கையோ? படர்வதால் இயற்கையாய் மலர்வது உன் இயல்போ? உயிர் தரும் கலையே, உன் அருளால் பாலைவனத்திலும் நீர் சுரக்குமோ! மலை முகட்டிலும் துளிர் முளைக்குமோ ? வானிலிருந்து விழும் நீர் அது வீழ்ந்த நிலத்தின் வண்ணத்தைப் பெறுவதே போல் நீ நினைந்த இடத்தின் சுவையை ஏற்கிறாயே, இந்த வன்மை உன் சொந்தமோ ? உன்னைப் புரிந்து கொள்வதே இயலாதோ? மலைமுகட்டில் தவழும் வேகமாய்த் தவழ்ந்து, பின்னர் கடலலையாய் நிலைப்பதும் நீதானோ ?

நாணுவின் நெஞ்சம் பிதிர்ந்து உதிர்த்த பெண் புகழ் மாலையைக் கேட்கக் கமலா அங்கில்லை. அவள் தனிமையில் தனக்குத் தானே அந்தப் பெண்மையைச் சினந்து வாடுகிறாள். இந்த மாயம் அவளுக்குள் ஏன் நிகழ்ந்தது? படர்வதற்குப் பொருள் வேண்டாமா? பொழிவதற்கும் களர்நிலமா வாய்த்தது? மலை முகடு வேண்டாமென்று கடலில் வீழ்ந்தால் அதன் கைப்பு தாளவில்லை. அலைகளின் உலைச்சலும் தாளவில்லையே ! பாலைவனத்து யாத்திரையாய்ப் போயிற்றே, இந்தப் பெண்மையின் வளர்ச்சி! தன்னைச் சுமந்த ஒட்டகத்தைக் கொன்று அதன் சேமிப்பு நீரையே அருந்த வேண்டிய வேதனை வந்ததே அவளுக்கு! பெண்மையே, நீ கொடியை, வலியை, உன் புத்தி பின் புத்திதான் !

ஜெகு இதை உணர்வானா !

**அ**வன் பாருக்குட்டியின் வீட்டு மாடியில் புகையை ஊதிக் கொண்டு பாட்டிசைக்கிறான். எதிரே அவள் அமர்ந்திருக்கிறாள்.

''ஜெகு, இந்த வீடே எனக்குப் பிடிக்கவில்லை.... கோபாலின் கண் படாத இடமாக நான், குஞ்சுராமன் நீங்கள் மூன்று பேரும் போய் விடலாம்'' என்றாள் அவள்.

''கீப் கொயட், பாருக்குட்டி...கோபாலை யார்னு நினைச்சே ஒரு வொண்டர்ஃபுல் நண்பர். தெரியுமல்லவா?'' என்றான் ஜெகு.

''அது வர வர ரொம்பவும் கோபப்படுகிறது. திட்டுகிறது.''

ஜெகு சிரித்தான். ''குணம் இருக்கிற இடத்திலே கோபம் இருக்கும். பிரியம் இருக்கிறவங்கதான் திட்டுவாங்க. நாராயணன் என்னைத் திட்டுறான். அதனாலே அவனை விட்டு நான் ஓட முடியுமா? நாராயணன் மாதிரித்தான் கோபாலும் எனக்காக உயிரையும் விடத் தயங்க மாட்டார். தெரிந்து கொள்'' என்றான்.

''விடச் சொல், பெரிய உதவியாக இருக்கும்'' என்றாள் பாருக்குட்டி. சொல்லி விட்டுச் சிரித்தாள்.

''சிரிக்காதே. இது விளையாட்டில்லை'' என்றான் ஜெகு.

''நான் சொல்வது மட்டும் விளையாட்டாகப் படுகிறதா, ஜெகு?''

''என்ன செய்யச் சொல்கிறாய், பாருக்குட்டி ?''

''குஞ்சு, நான், நீங்கள் மூன்று பேரும் எங்காவது போய் விடுவோம்.''

''எங்கே ?''

''எங்காவது கோபாலுக்குத் தெரியாத இடத்துக்கு.''

''கோபாலிடம் ஏன் இத்தனை கோபம் உனக்கு? அவர் உன்மீது உயிராய் இருக்கிறாரே, தெரியவில்லை?''

''உக்கும். உங்களுக்குப் புரியவேமாட்டேன் என்கிறது, ஜெகு.... அதன் பார்வையே மோசம்.''

''பார்வையா? அவர் ரசிகர், கலைஞர்.... ரசிகனின் பார்வையும் கலைஞனின் பார்வையும் சிரமமானவைதான்!'' ஜெகு 'ஹா..ஹா' என்று சிரித்தான்.

பாருக்குட்டி எழுந்து கீழே போய்விட்டாள். ஜெகு ஒரு சிகரெட்டை ஊதி முடித்தான். அடுத்து மற்றொன்று. அதுவும் முடிந்தது. உதடு காய்ந்திருக்கவே, ''பாருக்குட்டி.... வாட்டர் ப்ளீஸ்'' என்றான்.

ரோஹிணி தண்ணீர் கொண்டு வந்தாள். கொடுத்து விட்டுச் சாதாரணமாக உடனே போய் விடுபவள், போகாமல் நின்றாள். அவனையே பார்த்தாள்.

''வாட்?'' என்றான் ஜெகு.



''தம்பி, எனக்கென்னவோ உள்ளூறப் பயமாக இருக்கிறது'' என்றாள் அவள்.

''என்ன அக்கா?.... சும்மாச் சொல்!''

''கோபால் உன்னை ஒழித்துக் கட்டத் திட்டம் தீட்டியிருக்கிறான்.... நீ இனிமேல் இங்கே வராமலிருப்பது நல்லது.''

''கெட் அவுட் !'' என்று கத்தினான் ஜெரு.

''என்னை நம்புங்க, தம்பி.''

''தயவுசெய்து நீங்க போய் வாங்க, அக்கா....!''

கோபால் வந்து விடவே, விழுந்தடித்துக் கொண்டு வெளியே ஓடினாள் ரோகிணி.

''வாங்க கோபால், நீங்க என்னை ஒழித்துக் கட்டப் போகிறீர்களாம்! திட்டம் தயாரித்து விட்டீர்களாம்! ரோஹிணி அக்கா சொல்கிறாள். 'தம்பி..... தப்பிச்சு ஓடுடு' என்கிறாள்!'' ஜெரு சிரித்தான்.

கோபாலுக்கும் சிரிப்பு வந்தது. பச்சைச் சிரிப்பு !

''நம்ம நட்பு யாருக்குப் புரியும், கோபால்?.... சும்மா ஏதாவது கோபத்திலே நீங்க சொல்லியிருப்பீங்க....''

''ஜெக்கு, நான் சொல்லியிருப்பேனா, அப்படி ?''

''அட, சொன்னால்தான், என்னவாம் ? இந்த உயிர் உங்களுடையது.... எடுத்துக்குங்க....''

கோபால் நண்பனின் தோள்களை இறுகப் பற்றினான். அவனுடைய முரட்டுப் பிடியில் ஜெருவின் மெலிந்த உடல் துவண்டது.

''நல்லாப் பிடியுங்க, கோபால்...உங்களுக்கும் பாருக்குட்டிக்கும் இல்லாத இந்த உடம்பு இருந்தென்ன, போயென்ன?''

பாருக்குட்டியின் பெயரை அவன் உச்சரித்ததும் கோபால் பிடியைத் தளர்த்தினான். ''ஜெக்கு..... நீ இனி இங்கே வராமலேயே இரேன்'' என்றான்.

''விளையாடுகிறீர்களா, கோபால்?''

''நெசமாத்தான் சொல்றேன்.... நீங்க இங்கே வர வேண்டாம்.....''

''ஏன் ?''

''வேண்டாம்.''

''ஹஹ்ஹா!.... நான் வராமல் இருக்க மாட்டேன், கோபால். நீங்க வர இடத்துக்கு நானும் வரத்தான் வருவேன்.... என்னைப் பிரித்துப் பேசுகிறீர்களே, கோபால்! நான் ஒரு 'பூஸ்லெஸ் டைப்பு'ன்னு நீங்களும் முடிவு செய்து விட்டீர்களா?''

கோபால் என்ன சொல்வான்? அவனுடைய உள்ளத்தின் ஒரு மூலையில் இந்த ஜெரு எப்படியோ இடம் பிடித்துக்கொண்டு தான் விட்டான். அந்த இடத்திலிருந்து அவனைப் பெயர்த்துவிட முடியுமா ? தன் அன்புக்கு இடையூறாக, பெரும் தடையாக, இவன் ஏன் வந்தான் ?

''நல்லது, கோபால்.... நான் போய் வருகிறேன். உங்கள் மனசு சரியாக இல்லை போலிருக்கிறது'' என்றவாறே எழுந்த ஜெரு, அச்சமயம் அங்கு வந்த பாருக்குட்டியைப் பார்த்து, ''கோபாலைக் கவனித்துக் கொள், பாரு.....'' என்றான்.

''நீங்க புறப்பட்டு விட்டீர்களா ?'' என்றாள் அவள்.

''ஆமாம்.''

''இருங்க, நானும் வரேன்.''

கோபால் சினந்து எழுந்தான். ''நீ போகக் கூடாது..... ஆமாம்'' என்றான்.

''ஏன்? போனால் என்ன செய்வே ?'' என்றாள் பாருக்குட்டி.

''கொன்று போடுவேன்.''

''அட, கொன்று போடற ஆளைப் பாரு! வெங்வேன்னானும் !'' பாருக்குட்டி அழகு காட்டினாள், முகவாயைத் தோளில் இடித்து.

சீற்றமடைந்த கோபால் அவளுடைய கைகளைப் பற்றி முறுக்கியவாறே, ''என்ன, சொன்னே ?'' என்று கேட்டான்.

''சீ! நீ ஒரு மனிதனா? விடு கையை.... உனக்குத் தங்கச்சி இல்லே? உன்னைப் பெற்ற அம்மா இல்லே? பாருக்குட்டியை யாருன்னு நினைத்தாய்? இவள் காளி.... மலையாள பகவதி.... தெரியுமல்லவா? போ, வெளியே. என் வீட்டில் இனிமேல் நீ நுழையக் கூடாது. போ.'' பாருக்குட்டி சீறினாள். அனலாகப் பொரிந்தன சொற்கள்.

கோபால் ஒரு கணம் திகைத்துப் போய் விட்டான். அடுத்தகணம் ஒரே பாய்ச்சலில் வெளியே போனான்.

ஜெருவும் பாருக்குட்டியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு விக்கி விக்கி அழுதார்கள்.

(தொடரும்)










# பர்மிட் வந்தது

இந்திரா வீரராகவன்

சாப்பிடப்போகும் நேரத்தில் தபால்காரர் கடிதத்தை விட்டெறிந்து விட்டுப் போனார். மங்களத்துக்கு அதைப் படித்ததும் வருத்தம் தாளவில்லை. சமாசாரம் இவ்வளவுதான்: இதுகாறும் திருச்சியிலிருந்த அவர்கள் மகனைப் பங்களூருக்கு மாற்றியிருந்தார்கள். "பங்களூரில் எல்லாம் சௌகரியமாகத்தான் இருக்கிறது. ஆனால் அரிசிக்குப் படும் சிரமம்தான் தாங்கவில்லை" என்று பத்மநாபன் எழுதியிருந்தான்.

"இதுவும் ஒரு சோதனையா? இங்கு பாடாய்ப்பட்டுப் போராய்க் குவித்து, வருகிறவர்கள், போகிறவர்களுக்கெல்லாம் அரிசியும் சாதமுமாக வாரிப் போடுகிறோம். நம் வீட்டுக் குழந்தை ஒரு பிடி சாதத்துக்குத் தவிப்பதா?" என்று புலம்பித் தீர்த்தாள் மங்களம்.

இலையில் உட்கார்ந்து கொண்டிருக்கும் பரமசிவத்துக்குக்கூடக் கவனித்துச் சாதம் போடவில்லை அவள்.

"இவ்வளவு நாட்களாக அவன் அரிசி வேண்டாம் வேண்டாம் என்று சொல்லுவான். சீக்கிரம் சாப்பாடு போடு, கிராம முன்சீப்பைச் சந்தித்து அவனுக்கு அரிசி அனுப்ப ஏற்பாடு செய்கிறேன்" என்று அவர் கூறிய பிறகுதான் மங்களம் சற்று ஓய்ந்தாள்.

வாசற் திண்ணையில் உட்கார்ந்து ஓர் அடுக்கு கணக்குகளுடன் மல்லாடிக் கொண்டிருந்த மணியக்காரரின் கவனம் பரமசிவத்தின் பக்கம் திரும்புவதற்குள் பொழுது சாய்ந்து விட்டது. "அடடா, பரமசிவமா, ஏது?" என்று விசாரித்தார் சாவதானமாக.

"அதை ஏன் கேக்கறீங்க? பையனைத் திருச்சியிலேருந்து பங்களூருக்கு மாற்றி விட்டார்களாம். இத்தனை நாளா 'வீட்டு அரிசி எடுத்துப் போடா' என்றால் 'எவன் சுமந்து கொண்டு போவது?' என்று விறைப்பாய்ப் போனவன் இப்போது 'அரிசி கிடைக்கவில்லை' என்று எழுதியிருக்கிறான். அதைப் பார்த்த அவன் தாயார்க்காரி பிள்ளை பட்டினியே கிடக்கிறமாதிரி புலம்பித் தவிக்கிறாள். பங்களூருக்கு அரிசி எப்படி அனுப்புவது என்று உங்களிடம் விசாரிக்கலாமென்று..." பரமசிவம் முடிக்கவில்லை.

"பங்களூருக்கு அரிசியா? மாகாணம் விட்டு மாகாணம் போவதென்றால் கொஞ்சம் சிரமமாயிற்றே?" என்று இழுத்தார் மணியக்காரர்.

"என்ன செய்ய வேண்டும்? சொல்லுங்கள்" என்றார் பரமசிவம்.

"முதலில் கர்ணத்திடம் போய் உங்கள் நிலத்துப் பட்டா நெம்





பரை யெல்லாம் எடுத்துக் கொடுக்கச் சொல்லி உங்கள் பேரில்தான் நிலம் இருக்கிற தென்று அத்தாட்சி வாங்கி வாருங்கள்'' என்றார் முன்சீபு.

பரமசிவம் துண்டை உதறிக் கொண்டு கிளம்பினார். கர்ணத்திடம் அவர் கோரிக்கையைச் சமர்ப்பித்ததும் கர்ணம் நாலைந்து மரப்பெட்டிகளை இறக்கி, ஆயிரத்தெட்டுப் புத்தகங்களைப் புரட்டி அவர் கேட்ட தகவல்களைக் கொடுத்தார். இறுதியில் கர்ணம் மறுநாள் சமையலுக்குப் பரமசிவத்து வீட்டுக் கொல்லை வாழைக்காயில் நான்கைக் கேட்க மறக்கவில்லை!

கர்ணம் கொடுத்த தகவல்களை இணைத்து, 'பட்டாமங்கலத்திலிருக்கும் பரமசிவம் என்பவர் தம் சொந்த நிலத்தின் விளைச்சலில் இருந்து நாலு குவிண்டால் அரிசியை பங்களூரில் வசிக்கும் தம் மகன் பத்மநாபனுக்கு அனுப்ப விரும்புவது உண்மை; அவருக்குப் பர்மிட் வழங்கலாம்' என்று கிராம முன்சீபு சர்டிபிகேட் கொடுத்து, பரமசிவத்தின் மனுவை ரெவின்யூ இன்ஸ்பெக்டர் மூலம் டி. எஸ். ஓ.வுக்கு அனுப்பி வைத்தார்.

பரமசிவம் தினம் தினம் டி. எஸ். ஓ.விட மிருந்து பதிலை எதிர்பார்த்தார்.

டி. எஸ். ஓ.விடமிருந்து கீழ்க்கண்ட பதில் வந்தது: ''பிரஸ்தாபிக்கப்பட்ட பரமசிவம் அவரது நிலத்துக்குத் தக்கபடி அரசாங்கத்துக்குக் கொடுக்க வேண்டிய நாற்பது மூட்டை நெல்லைக் கொடுத்தால்தான் அவருக்குப் பர்மிட் வழங்கப்படும்.''

பரமசிவத்துக்கு அதிர்ச்சிதான். நாற்பது மூட்டை நெல் விற்பது அந்த வருஷம் சாத்தியமில்லைதான். மழை பெய்து ஒழுங்காக விளைந்தால்தானே? ஆனாலும் என்ன செய்வது? சொந்தப் பிள்ளையை ஒரு பிடி சாதம் சாப்பிட முடியாமல் தடுக்கிற நெல் இருந்துதான் என்ன பயன்?

வீட்டுக்கு வந்தார். அந்த வருடம் ஆள் தேள்களுக்குக் கொடுக்கவென்றும், விதைக் கென்றும் வைத்திருந்த எல்லா நெல்லையும் சுரண்டிப் பெருக்கி அரசாங்க வியாபாரியான குப்பாஞ் செட்டியை அழைத்து அளந்து விட்டு, கிராம முன்சீபு சொன்ன மாதிரி பங்களூரில் சம்பந்தப்பட்ட உணவு அதிகாரியிடமிருந்து பட்டாமங்கலத்திலிருந்து நாலு குவிண்டால் அரிசி பங்களூருக்கு எடுத்துச் செல்ல அனுமதி வாங்கி அனுப்பும்படி பத்மநாபனுக்கு எழுதினார்.

பத்மநாபன் ஒன்றரை மாதங்கள் கழித்து, ''ஏனப்பா இந்தக் கஷ்டம்? அவரையும், இவரையும் பார்த்துக் காத்திருந்து சர்டிபிகேட் பெறுவதற்குள் போதும் போதுமென் றாகிவிட்டது'' என்று எழுதியிருந்தான்.

அரசாங்கத்துக்கு நெல் அளந்த அத்தாட்சியுடன் பத்மநாபன் அனுப்பிய 'நோ அப்ஜெக்ஷன்' ஸர்டிபிகேட்டையும் டி. எஸ். ஓ.வுக்கு அனுப்பினார் பரமசிவம்.

நாட்கள் ஓடின.

இரண்டு மாதங்கள் கழித்து மாவட்ட விநியோக அதிகாரியிடமிருந்து பரமசிவம் அனுப்பிய மனு வகைகள் கற்றையாகத் திரும்பி வந்தன.

'குறிப்பிட்ட மனுவில் 75 பைசா கோர்ட் பீஸ் ஸ்டாம்பு ஒட்டி அனுப்பினால்தான் பர்மிட் வழங்கப்படும்' என்பது மாவட்ட விநியோக அதிகாரி கடிதத்தின் சாராம்சம்.

பட்டாமங்கலத்தில் கோர்ட் பீ ஸ்டாம்புக்கு எங்கே போவது? ஆகவே, கோடி வீட்டுச் சுப்பாமணியை அழைத்து, பஸ்ஸுக்கு, டிபனுக்கு, சினிமாவுக்குச் சேர்த்து அவனுக்குக் காசு கொடுத்துப் பக்கத்து டவுனுக்கு அனுப்பி ஸ்டாம்ப் வாங்கி வரச் செய்தார். நாட்கள் பல ஓடியும் பர்மிட் வராமற் போகவே, ''தபால் மூலம் காரியத்தை நடத்துவதால் இவ்வளவு தாமதமாகிறது. சிரமத்தைப் பாராமல் நீங்களே நேரில் டி. எஸ். ஓ. ஆபீஸுக்குச் சென்று ஆக வேண்டியவைகளைக் கவனித்து, பர்மிட்டைக் கையோடு வாங்கி வந்துவிடுங்கள்'' என்று ஊக்கினார் கிராம முன்சீபு.

பரமசிவம் கிளம்பினார். ஜில்லாத் தலைமைக் காரியாலய வாயிலில் பல மணி நேரம் தவம் கிடந்து 'அவரைப் பார், இவரைப் பார்' என்று அலைக்கழிக்கப்பட்டு, அப்ளிகேஷன்கள் மலை மாதிரி குவிந்திருந்த மேஜை எதிரே அமர்ந்திருந்த கிளார்க்கை இறுதியாக அணுகி விசாரித்தார்.

''அந்த மாதிரி தபால் இங்கு வரவேயில்லையே?'' என்றார் முதலில். பிறகு ''ஓ, அதுவா? அந்தப் பர்மிட் அனுப்பியாகி விட்டதே'' என்றார்.

''இல்லையே. இன்று காலைத் தபால் வரை வரவில்லையே. கொஞ்சம் பாருங்கள்'' என்று கெஞ்சினார் பரமசிவம்.

சற்று மனமிளகிய அவர் அந்தக் குவியலைக் கிளறி நீண்ட நேரத்துக்குப் பிறகு பரமசிவத்தின் மனுக்களைக் குப்பையாக வாரிப் போட்டு, ''ஓ! இதற்குப் பர்மிட் கொடுத்தாகி விட்டது. எடுத்துப் போங்கள்'' என்றார்.

பரமசிவம் ஆவலோடு வாங்கினார். பட்டாமங்கலத்திலிருந்து ஒன்றரை குவிண்டால் அரிசி (அவர் கேட்டது 4 குவிண்டால்) பங்களூருக்கு முதல் தேதிக்குள் அனுப்புவதற்காகப் பர்மிட் வழங்கப்பட்டிருந்தது.

ஆனால் அந்தோ பரிதாபம்! — அன்று முதல் தேதி. இதை வைத்துக் கொண்டு என்ன செய்வது என்று அவர் பரிதவித்ததைப் பார்த்த கிளார்க், ''ஹெட் கிளார்க்கைப் போய்க் கேளும்'' என்றார்.

பரமசிவம் ஹெட் கிளார்க்கின் நாற்காலியைத் தேடிப் போனார். ''என்ன?'' என்ற அவர் கேள்வியிலேயே பரமசிவத்துக்கு உடம்பு குறுகியது.

''அரிசிக்குப் பர்மிட் கொடுக்கப்பட்டுள்ளது.....''

''கொடுத்தாச்சோல்லியோ? எடுத்துண்டு போமேன்.''

பரமசிவம் தேதி பற்றிச் சொன்னார்.

''அதுக்கு என்னை என்ன பண்ணச் சொல்கிறீர்?'' என்றார் ஹெட்கிளார்க்.

திருப்பத்தூர் எம். எஸ். ராமனுஜ அய்யர் அவர்கள் குமாரரும் பெங்களூர், மதராஸ் அட்வர்டைஸிங் கம்பெனியைச் சார்ந்தவருமான சிரஞ்சீவி ஆர். மணி B. A., B. L. அவர்களுக்கும் மாயூரம் ஸ்ரீ எஸ். என். ஜெயராமன் அவர்கள் குமாரத்தி சௌபாக்கியவதி மைதிலிக்கும் சமீபத்தில் திருமணம் மாயூரத்தில் சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள் !

''தேதியைத் திருத்திக் கொடுங்கள்.''

''ஐயையோ! அதை நான் செய்யப்படாது டி. எஸ். ஓ.வுக்குத்தான் அதற்குப் பவர்!''

''அவரை எப்போது பார்க்கலாம்?''

''அவர் 'காம்'பில் போயிருக்கிறார். இன்றைக்கு வருவாரோ என்னவோ?''

''நான் இன்று தங்கினால் அவரைப் பார்க்கலாமா?''

''அதை எப்படி நான் நிச்சயமாகச் சொல்ல முடியும்?''

பரமசிவம் செய்வதறியாது நின்றார்.

''போம். டி. எஸ். ஓ. வந்ததும் கையெழுத்து வாங்கித் தபாலில் அனுப்பி வைக்கிறேன்'' என்றார் தலைமைக் குமாஸ்தா.

''கட்டாயமாகச் சீக்கிரம் அனுப்பிவிடுகிறீர்களா?''

''அட, உம்ம பர்மிட்டைப் பிய்த்துச் சாப்பிடவா போறோம்? சீக்கிரம் வரும், போம்'' என்றார் அவர்.

நாட்கள் ஓடின. பர்மிட் தபாலில் வரவில்லை. பரமசிவம் பழையபடியும் யார் யாரையோ பிடித்துத் தமக்கு முன்பின் அறிமுகமில்லாத நபர் ஒருவரின் ஒரு சிபாரிசுக் கடிதத்தைப் பெற்றுக் கொண்டு தலைமைக் காரியாலயத்தின் மீது படையெடுத்தார்.

பரமசிவம் 'பங்களூர் பர்மிட்' என்று ஆரம்பித்ததுமே தலைமைக் குமாஸ்தாவின் முகத்தில் கடுகு பொரிந்தது. ''ஏனய்யா பிள்ளையைப் பெங்களூருக்கு அனுப்பிவிட்டு இருக்கிறவன் உயிரை வாங்குகிறீர்! வீட்டிலேயே உட்கார வைத்துக் கொண்டு சோறு போட்டுத் தொலைக்கக் கூடாதா?'' என்று சபித்துக் கொண்டே வரவேற்றார் அவர்.

பரமசிவம் சிபாரிசுக் கடிதத்தை நீட்டினாரோ இல்லையோ, ஆகாசத்தைப் பார்த்துக் கொண்டிருந்த தலைமைக் குமாஸ்தா படாரென்று இறங்கி வந்து அகமகிழ்ந்து போனார். ''அடே டே! வராகசாமிக்கு வேண்டியவரா நீங்க? அதை அப்பவே சொல்லப்படாதோ? இப்போ அவன் தனியா இருக்கானா? பாமிலியோடு இருக்கானா? மாத்தூரிலே வசதியில்லேன்னு குடும்பத்தை ஊரிலேயே விட்டிருந்தானே!'' தலைமைக் குமாஸ்தாவின் குஷிக்கு அணையே போட முடியவில்லை.

பரமசிவம் பரக்கப் பரக்க விழித்தார். அவர் வராகசாமியைக் கண்டாரா? மாத்தூரைக் கண்டாரா? அடுத்த தரம் வருவதற்குள் இதையெல்லாம் விசாரித்து வைத்துக் கொள்ள வேண்டும். பிள்ளைக்கு அரிசி அனுப்ப வேண்டுமென்றால் இதெல்லாம் தெரியாமல் இருக்கலாமா?

பரமசிவத்தின் பர்மிட் விரைவில் தேடப்பட்டது. அதிர்ஷ்டவசமாக டி. எஸ். ஓ.வும் ஆபீஸிலேயே இருந்ததால் தலைமைக் குமாஸ்தாவே நேரில் சென்று பதினைந்து நாட்கள் கெடு பெற்றுப் பர்மிட்டை வாங்கிக் கொடுத்துப் பரமசிவத்தைச் சந்தோஷமாக அனுப்பி வைத்தார்.

பரமசிவம் வராகசாமியின் நாமத்தை வாழ்த்தியவாறே வெற்றி வீரராக ஊருக்குத் திரும்பி வந்து சேர்ந்தார்.

சாரு

''ஏண்டாப்பா! இப்படி வீடு வீடாப் போய்ப் பிச்சை எடுப்பது உனக்குச் சரின்னு படுகிறதா?''

''பின்னே என்ன பண்றதம்மா? நான் இருக்கிற இடத்துலே எல்லோரும் கொண்டு வந்து போட மாட்டேங்கிறாங்களே!''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

ஒன்றரைக் குவிண்டால் அரிசியை அளந்து தைத்து அடுத்த டவுனில் உள்ள லாரி ஆபீஸுக்கு நேரில் போய் 'புக்' செய்து விட்டு வீட்டுக்குத் திரும்பியபோது பெரிய கல்யாணத்தை முடித்த அசதிதான் பரமசிவத்துக்கு. ''மங்களம்! பிள்ளைக்கு அரிசி அனுப்பி விட்டேன். இரண்டு நாட்களில் போய்ச் சேர்ந்து விடும். அரிசி மூட்டை வந்து சேர்ந்ததும் ஆரத்தி சுற்றி வரவேற்கும்படி உன் மாட்டுப்பெண்ணுக்குக் கடிதம் எழுதிப் போடு'' என்றார் ஹாஸ்யமாக.

சொல்லி வைத்த மாதிரி தபால்காரர் கடிதத்தைக் கொடுத்து விட்டுப் போனார். பங்களூரிலிருந்து பத்மநாபன்தான் எழுதியிருந்தான்.

''அப்பாவுக்கு நமஸ்காரங்கள்.

நான் இவ்வூருக்கு வந்து மூன்று ஆண்டுகள் ஆகிவிட்டதால் என்னைச் சென்னைக்கு மாற்றி விட்டார்கள். இன்று குடும்பத்துடன் கிளம்புகிறேன். தற்போது மாமனார் வீட்டில்தான் தங்குகிறேன். அதிகம் எழுத நேரம் இல்லை. மற்றவை அடுத்த கடிதத்தில்.

பத்மநாபன்''

மங்களம் சிலையாகச் சமைந்தாள். பரமசிவம் மயங்கி விழவில்லை. அரசாங்கக் காரியாலயத்திலிருந்து அரிசிக்குப் பர்மிட் வாங்கியவர் மயங்கிவிழக் கூடிய சாமானிய மனிதராகவா இருப்பார்?

மீண்டும் அவர் பங்களூரிலிருந்து பட்டாமங்கலத்துக்குப் பர்மிட் வாங்குவாரா? அல்லது பட்டாமங்கலத்திலிருந்து பங்களூர் வழியாகச் சென்னைக்குப் பர்மிட் கேட்பாரா? அன்றி அரிசி லாரி புக்கிங் ஆபீஸிலேயே ஏலம் போகட்டும் என்று விட்டுவிடுவாரா என்பது பொறுத்திருந்து பார்க்க வேண்டிய விஷயம்!



# ஸில்வர் சிப்ஸ்




தூய சலவைக்கும், துகிலின் வெண்மைக்கும்
அரிய, அற்புதத் தயாரிப்பு.




மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை R. S. சேலம் ஜில்லா
மானேஜிங் ஏஜெண்ட்ஸ் :
சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

Criterion-MC-615



# உறுதி

வெங்கடலக்ஷ்மி

அட்டைப்படக் கதை

**கதவு** தட்டப்படும் சப்தம், சமையலறையில் வேலையாயிருந்த ஊர்மிளாவின் காதில் தெளிவாய் விழுந்தது. குழந்தைகள் இருவரும் எப்போதோ தூங்கிப் போய்விட்டார்கள். விளக்கை அணைத்து மின்சார விசிறியைச் சுழலவிட்டு விட்டுக் கதவைச் சாத்திக் கொண்டு வெளியே வந்தாள். மணி பதினொன்றைத் தாண்டியிருந்தது. — அக்கம் பக்கத்திலெல்லாம் அநேகமாக விளக்குகள் அணைந்து விட்டார் தூங்கப் போய்விட்டார்கள். மூன்றாவது முறையாக, சமைத்த பண்டங்களையெல்லாம் மின்சார அடுப்பில் சுடவைத்துக் கொண்டிருந்த பொழுதுதான் வாசற் கதவின் மின்சார மணி கணகணவென்று ஒலித்தது.

நாலைந்து வருஷங்களாகவே ஒளிவு மறைவாக இருந்த விஷயம்தான். கசமுசவென்ற பேச்சுக்கள் அவள் காதில் விழத்தான் செய்தன. அம்மா வந்திருந்தாளே, பத்மா பிறந்த பொழுது — அப்பொழுது அவள் நேரிலேயே கேட்டுவிட்டாள்: ''தினம் ராத்திரி இரண்டு மணிவரையிலுமா ஆபீசில் வேலை? எல்லாருக்கும் கொடுக்கிற சம்பளம்தானே உங்களுக்கும் ஆபீசிலே தருகிறீர்கள்? விடிய விடிய வேலை செய்யறதுக்காக ஏதாவது அதிகம் போட்டுத் தரானா?'' என்று. ஐயகர் அசடு வழியச் சிரித்தான். அம்மா நல்ல புத்திசாலி. வந்த ஒரு வாரத்துக்குள்ளாகவே விஷயத்தைத் தெரிந்துகொண்டு விட்டாள், மாப்பிள்ளை கொஞ்சம் ஒரு மாதிரி என்று.

போவதற்கு முன்னால் ஊர்மிளாவை எச்சரித்தும் விட்டாள்: ''ஊர்மி! மாப்பிள்ளையின் போக்கு ஒன்றும் நன்றாகவேயில்லை. குடிப் பழக்கம் உண்டு போலிருக்கு. — ராத்திரி கதவைத் திறக்கும்போது குபீரென்று நாற்றம்! — குடி பழகி விட்டால் அடுத்த இரண்டும் கூடவே வந்துவிடும். இது அண்ணா, அடுத்த இரண்டும் தம்பிகள்! — ஜாக்கிரதையாயிரு'' என்று.

ஊர்மிளாவுக்கும் அந்த விஷயம் தெரியும். ஆனால் இப்படிக் கடைசியாக நேர்முகமாகவே ஊர் சிரிக்கும் நிலை வந்துவிடும் என்று அவள் எதிர்பார்க்கவில்லை. எதை வரக் கூடாதென்று எண்ணி, தன் முழு பலத்துடன் எதிர்த்தாளோ, எந்த ஒரு சம்பவம் தன் வாழ்க்கையில் குறுக்கிடாதென்று எண்ணினாளோ, எதைப் பற்றிக் கனவில் கூட நம்ப மறுத்தாளோ, அது அவளது வாழ்வையே குலைத்துவிடும் அளவுக்குக் கைமீறி விபரீதமான அளவுக்குப் போய்விட்டது! அதுமட்டுமா? அன்றைய இரவின் நிகழ்ச்சிகளை மீண்டும் எண்ணிப் பார்த்தால் அவளது மனமும் உடலும் தகிக்கும் அனலாய்க் கொதித்தன. சே! என்ன அவமானம்! வீட்டில் வளர்ந்து வரும் குழந்தைகளின் பிஞ்சு மனத்தில் அவர்களுடைய தகப்பனைப் பற்றி எப்படிப்பட்ட அபிப்பிராயம் தோன்றியிருக்கும்? வெட்கம்! வெட்கம்!

ஊர்மிளா கண்ணில் துளித்த நீரைத் துடைத்துக் கொண்டு வந்து வாசற் கதவை அடைந்தாள். கதவிலிருந்த சிறு அடைப்பை விலக்கி வெளியே பார்த்தாள். அவன்தான்— ஐயகர்தான் — நின்று கொண்டிருந்தான்.

அவனுடைய வாயில் சிகரெட் புகைந்து கொண்டிருந்தது.

அடிவயிற்றிலிருந்து குபீரென்றெழுந்த அருவருப்பையும் குமட்டலையும் சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு கதவைத் திறந்தாள். ஒரு கையில் ஆபீஸ் பைல்களும், இன்னொரு கையில் வாயிலிருந்து எடுத்த சிகரெட்டுமாக அலட்சியப் பார்வையை அவள்மீது வீசியபடி உள்ளே நுழைந்தான் ஜயகர். கதவை மீண்டும் சாத்திவிட்டுச் சமையல் அறையை நோக்கிப் போனாள் ஊர்மிளா, அவனை நிமிர்ந்து பாராமல்.

தன்னுடைய அறைக்குள் நுழைந்த ஜயகர் கையிலிருந்த பைல் கட்டை மேஜை மேல் விசிவிட்டுப் பீரோவைத் திறந்தான். ஊர்மிளைக்குப் பீரோ திறக்கும் சத்தம் தெளிவாய்க் கேட்டது. மெதுவாக வெளியே வந்து எட்டிப் பார்த்தாள். — பீரோவில் வரிசையாய்க் காட்சியளித்த மதுக் குப்பிகளில் ஒன்றைத் திறந்து கிளாஸில் ஊற்றிக் கொண்டிருந்தான் ஜயகர். அவள் ஓசைப் படுத்தாமல் திரும்பிப் போய்விட்டாள். பத்து நிமிடங்களுக்குள் உணவு வகைகளையெல்லாம் எடுத்து மேஜை மீது வைத்து விட்டு விளக்கை யணைத்தாள். தன்னுடைய அறைக்குள் நுழைந்து கதவைத் தாளிட்டாள். உறங்கும் குழந்தைகளுக்கு நன்றாகப் போர்த்து விட்டு, அவர்கள் பக்கத்திலேயே தானும் படுத்துக் கொண்டாள்.

அவள் நன்றாகத் தூங்கி எத்தனையோ நாட்கள் — மாதங்கள் ஆயின. கரையான் மெல்ல மெல்ல அரிப்பது போல் இருதயத்துக்குள்ளே அரித்தெடுக்கும் வேதனையை அவள் தாங்கிக் கொள்ளப் பழகிக்கொண்டு விட்டாள். ஆனால் அந்த வேதனையினூடே நீற்றுப்போன சாம்பலுக்குள் மறைந்திருக்கும் நெருப்புக் கங்கு போல் ஓர் உறுதி மெல்ல மெல்லப் பிறந்து வளர்ந்து வந்தது. அந்த மன உறுதி தன்னுள்ளே கருவாகத் தோன்றி மலர்வதை அவளே இன்னும் நன்றாக உணரவில்லை. பாரத நாட்டுப் பண்பாட்டில் பிறந்து, பழங்காலத்துப் பழக்கங்களிலேயே ஊறிக் கிடந்த பெற்றோரால் வளர்த்து ஆளாக்கப்பட்ட அவள், கணவனைத் தன்னுடைய தெய்வமாக எண்ணி அவன்மீது பெருமதிப்பு வைத்திருந்தது அதிசயமில்லை. அவ்வளவு மதிப்புக்கும் அன்புக்கும் தகுதி உடையவனாகத்தான் அவனும் முதலில் நடந்து கொண்டான்.

ஜயகர் நன்றாகப் படித்தவன். நல்ல உத்தியோகம். கண்ணுக்கு நிறைவான கட்டழகன். கிராமத்திலிருந்து வந்து தன் கைப்பிடித்த கட்டழகியை மலராகப் போற்றி, அன்பென்னும் மழையைப் பொழிந்து, அவ்வன்பின் அணைப்பிலே அவளுடைய மென்மையான பெண்மை அழகு மேலும் மேலும் பொலிவு பெற்றுப் பூரணமடைவதைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்து போனான் அவன். அப்பெண்மையின் பூரணத்திலே ஒன்றன் பின் ஒன்றாக இரண்டு மொட்டுக்கள் மலர்ந்து, சிரித்துப் பேசி விளையாட ஆரம்பித்தவுடன், அவர்களுடைய வீடு, பூலோக சுவர்க்கமாகவே மாறிவிட்டது. இப்படிப்பட்ட இன்பச் சூழ்நிலை சிறுகச் சிறுகத் துன்பந் தரும் பெரு நரகமாக எப்படி மாறியதென்பது ஊர்மிளைக்குப் புரியவேயில்லை.

அடுத்த அறையில் தடாலென்ற சப்தம். குழந்தைகள் தூக்கத்தில் முனகினார்கள். ஊர்மிளை உடம்பைச் சிலிர்த்துக்கொண்டாள். குழந்தைகளைத் தன்னோடு சேர்த்து அணைத்துக்கொண்டு சமாதானப்படுத்திவிட்டு மெல்ல எழுந்து கதவண்டை வந்தாள். ஒரு விநாடி யோசித்தாள். பிறகு கதவைத் திறக்காமலே மீண்டும் வந்து படுத்து விட்டாள்.

இருள் பிரிந்து பொழுது புலரும் வேளையில் அரைகுறையாகத் தெரியும் காட்சிகள் மெல்ல மெல்ல நன்றாகப் புலனாவது போல், அவளுடைய மனக் கண்ணில் மறைந்து போன தன்னுடைய இன்ப வாழ்க்கையின் ஒவ்வொரு நிகழ்ச்சியும் மெல்ல மெல்ல நினைவுக்கு வந்தது.

திருமணம் முடிந்து ஊர்மிளையை முதன் முதலாகப் பம்பாய்க்கு அழைத்து வந்தான் ஜயகர். பணமும் பதவியும் படைத்தோர் வாழும் பகுதியான மலபார் ஹில் பகுதியில் எட்டு அடுக்குகளை உடைய உயரமான கட்டிடத்தில் பன்னிரண்டு அறைகளுடைய ஒரு மாடி அடுக்கு முழுவதும் அவர்களுடையது. எங்கு பார்த்தாலும் விலை உயர்ந்த கலைப் பொருள்களும் அற்புதமான அழகுடன் இழைக்கப்பட்ட ஆசனங்களும், முற்போக்கு வசதிகளுடன் கூடிய அறைகளும், குளிர் சாதனப் பெட்டி, மின்சார அடுப்பு ஆகியவைகளும் நிரம்பப் பெற்றிருந்த அப் பெரிய இடம் இனி தன்னுடைய வீடு என்பதை அறிந்த ஊர்மிளை ஒரு சிறு குழந்தையைப் போல மனம் நிறைந்த மகிழ்ச்சியுடன் வளைய வளைய வந்தாள்.

பிறந்த தினத்திலிருந்து கிராமத்திலிருந்து அடிபெயர்த்து வைக்காதவள் அவள். பம்பாயில் அவள் கண்ட ஒவ்வொரு காட்சியிலும் ஒவ்வொரு புதுமையைக் கண்டு ரசித்தாள். அகலக் கரையிட்ட காஞ்சீபுரம் புடவை கட்டி, பளிச்சிடும் நகைகளுடன் நீண்ட பின்னல் முழங்காலைத் தொட்டுக் கொஞ்ச, சௌபாத்தி சமுத்திரக் கரையில் ஜயகருடன் அழகுச் சிலையாக அவள் நடந்து செல்கையில் எத்தனையோ கண்கள் அவ்விருவரையும் பொறாமையுடன் நோக்கின.

''எங்கிருந்தடா திருடிக் கொண்டு வந்தாய் இந்த அஜந்தா வண்ணச் சிலையை? திருட்டுப் பயலே! நீ நல்ல அதிருஷ்டசாலியடா!'' என்று அவனுடைய ஆப்த நண்பரான சந்திரன் ஆபீசில் ரகசியமாகக் கேட்ட பொழுது ஜயகர் உண்மையிலேயே கிளுகிளுப்படைந்தான்.

மாலை எப்பொழுது வரும், வீட்டுக்கு எப்பொழுது போகலாம், ஊர்மிளையை எப்பொழுது காணலாம் என்ற எண்ணம், சந்தன வத்தியின் மணம் போல அவன் மனத்தில் பகலெல்லாம் பரிமளித்துக் கொண்டேயிருக்கும்.

வீட்டுக்கு வரும்பொழுது சின்னச் சின்னப் பொருள்கள் ஏதாவதும் பரிசாக வாங்கி வரத் தவறவே மாட்டான். என்றைக்காவது ஆபீஸில் வேலை அதிகமாக இருந்து வீட்டுக்கு அவன் வரத் தாமதமாகி விட்டால், குழந்தைகள் உறங்கி விடுவார்கள். "நான் வருவதற்குள்ளாகக் குழந்தைகளை ஏன் தூங்க வைத்து விட்டாய்?" என்று கேட்டு அவர்கள் அழுவதையும் லட்சியம் பண்ணாமல் எழுப்பி விட்டுக் கொஞ்சிக் குலாவி முத்தமிட்டு, அன்பினால் அவர்களைத் திணறடித்துவிடுவான்.

"ஐயோ! பாவம், தூங்கும் குழந்தைகளை எழுப்பி, அதுகள் கத்தக் கத்த என்ன கொஞ்சல் வேண்டிக் கிடக்கு? காலையில் கொஞ்சினாற் போதாதா? அதற்குள் உங்கள் குழந்தைகளை யார் கொத்திக் கொண்டு போய்விடுவார்கள்?" என்று ஊர்மிளா அவனைக் கடிந்து கொள்வாள்.

"ஐயையோ! உனக்குத்தெரியாதடி ஊர்மி! அதுகளை எழுப்பிக் கொஞ்சாவிட்டால், எனக்கு ராத்திரி யெல்லாம் தூக்கமே வராது!" என்று பதிலளித்துவிட்டு மீண்டும் தூங்க எத்தனிக்கும் குழந்தை பத்மாவின் மலர்க் கன்னம் கன்றிப் போகும்படி அழுத்தி முத்தமிடுவான்.

அது விழித்துக் கொண்டு வீல் வீலென்று அலறும்.

"சரியாப் போச்சு! இனிமேல் அவளைத் தூங்க வைக்க என்னால் முடியாது. நீங்களாச்சு, உங்கள் பெண்ணாச்சு! சாப்பிட்டு விட்டு விடிய விடிய உங்கள் பெண்ணோடு கொஞ்சிக் கொண்டிருங்கள்" என்று பொய்க் கோபத்துடன் சொல்லி விட்டுப் படுக்கைகளை உதறிப் போடுவாள் ஊர்மிளா.

"சரி, சரி நான் பார்த்துக் கொள்ளுகிறேன். இந்தச் செல்லக் குட்டியை! நீ போய்த் தூங்கு!" என்று ஜயகரும் பதிலுக்குச் சீறுவான்.

ஆனால் அடுத்த விநாடியே வாயைப் பொத்திக் கொண்டு சிரிக்கும் தனது அழகு மனைவியைப் பார்த்து அவனும் கலகலவென்று சிரித்து விடுவான்.

கடிகாரம் நான்கடித்து ஓய்ந்தது. ஊர்மிளா அரை குறையான தூக்கத்தில் ஆழ்ந்தாள். சுமார் ஒரு மணி நேரம் தூங்கியிருப்பாள். வெளியே உரத்த குரலில் யாரோ பேசும் குரல் கேட்டுச் சட்டென்று விழித்துக் கொண்டாள். மயக்கத் திரையைக் கிழித்துக் கொண்டு அவளுடைய உணர்வுகள் தெளிவடைந்தவுடன் அலுப்புடன் மீண்டும் படுக்கையில் சாய்ந்து கண்களை மூடிக் கொண்டாள்.

"அம்மா! பயமாயிருக்கு!" என்றபடியே மலர விழித்த கண்களுடன் தாயின் தோளின் மீது முகத்தைப் புதைத்துக் கொண்டான் பெரியவனான ரவி.

குழந்தையைத் தன்னோடு அணைத்துக் கொண்ட ஊர்மிளா வேதனை தாங்காமல் வெடித்து விடும்போல் கனத்த நெஞ்சை ஒரு கையால் அழுத்திக் கொண்டாள்.

"கார் விபத்தில் நீ தானே முன் ஆள் மீது மோதிவிட்டு ஓடி விட்டதாகச் சொன்னார்கள்! இவ்வளவு கட்டுகள் போட்டிருக்கிறாயே. உனக்கு எப்படி அடி பட்டது?"

"மூந்தா நாள் காரை அவன் மீது மோதி விட்டேன். நேற்று அவனைக் கடைத் தெருவில் தற்செயலாகப் பார்த்து விட்டேன்...!"

— எம். எம்.' கே.




ஆயிற்று. ஏறக்குறைய ஐந்தாண்டுகள் விளையாட்டுப் போல் ஓடிவிட்டன. அவளும் வாய் திறவாமல் புற்று மண்ணிலேயே மூடி அரிக்கும் சிறு கரையானைப் போல் அரித்தெடுக்கும் துயரத்தைச் சகித்துக் கொண்டாள்; மனத்தைப் பாறையாக மாற்றிக் கொண்டாள். ஆனால், அவ்விரவு, அந்த நிகழ்ச்சி! — ஜயகர் கூறிய அவ்வார்த்தைகள்! சீச்சீ! என்ன வெட்கக்கேடு!

குழந்தைகள் இருவரும் உறங்கி விட்டார்களென அவள் எண்ணியிருக்க, ரவி அறைக்கு வெளியே வந்து உரத்த குரலில் கூச்சலிடும் தன் தந்தையையும், அவன் பக்கத்தில் கத்திரித்து விட்ட தலையும், முழங்காலுக்கு மேல் கவுனும், குதிகால் உயர்ந்த செருப்பும், உதட்டுச் சாயமுமாகத் தன் தந்தையின் தோளை அணைத்தபடி நின்று கொண்டிருந்த ஒரு பெண்ணையும், வியப்பால் விரிந்த மலர் விழிகளுடன் மாறி மாறிப் பார்ப்பதைக் கண்டவுடன் ஊர்மிளாக்கு அவமானத்தினால் உடல் குன்றிவிட்டது. பாறையாக மாற்றிக் கொண்டிருந்த அவள் மனத்தில் ஒரு பெரும் பிளவு அந்த நிமிஷமே தோன்றிவிட்டது!

"ஏ கிராமாந்திரம்! இனிமேல் நான் இப்படித்தான் இருப்பேன்! இவள்தான் என்னுடைய டார்லிங்! இவள் பெயர் என்ன தெரியுமா? — ஜாய்ஸ். ஜாய்ஸ் என்றால் சந்தோஷம். எனக்கு இவளோடு இருப்பதுதான் சந்தோஷம். என்ன, தெரியுமா?" என்று உளறியபடியே பக்கத்திலிருந்த பெண்ணின் தோளை அணைத்தபடி வெளியே போய்விட்டான். தன்னைப் பார்த்து ஏளனமாகப் புன்னகை செய்தபடியே வெளியே போன அப்பெண்ணைக் கண்கொட்டாமல் பார்த்தபடியே அசையாச் சித்திரமாய், பொம்மையாய், சிலையாய் நின்றாள் ஊர்மிளா.

"அந்த மாமி யார் அம்மா? அப்பா எதுக்கம்மா அவளோட போயிட்டார்?", என்று ரவி மெல்லக் காதோடு கிசுகிசுத்த பொழுதுதான் ஊர்மிளாக்குத் தன் நினைவு வந்தது. கீழே கார் புறப்படும் சத்தம் கேட்டது.

ரவி மீண்டும் அதே கேள்வியைக் கேட்டான்:

''அந்த மாமி அப்பாவோடே ஆபீஸிலே வேலையாயிருக்கா. அங்கேதான் அப்பா அவளோடே போயிருக்கா.''

''ராத்திரிகூடவாம்மா ஆபீஸ்? அப்பாவுக்குத் தூங்க வேண்டாமா?''

ஊர்மிளை ஒன்றுமே பதில் சொல்லாமல் ஜன்னல் வழியாக வெளியே வெறித்து நோக்கினாள். கூரிய ஊசி ஒன்று நெஞ்சைக் குத்தி எடுப்பது போன்ற வேதனை அவளுள்ளே ஊடுருவிச் சென்றது.

சட்டென்று குழந்தை ரவியை வாரியெடுத்து நெஞ்சோடு அவனை அணைத்துக் கொண்டாள். குழந்தையின் பட்டுப்போன்ற பூவுடம்பு தன்மீது பட்டவுடன் அவளுடைய நெஞ்சின் வேதனை சற்றுக் குறைவது போல் இருந்தது. அப்படியே உறக்கத்திலாழ்ந்து விட்ட ரவியைப் படுக்கையில் கொண்டு விட்டு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள்.

இன்னும் என்ன அசந்தர்ப்பமான கேள்விகளையெல்லாம் குழந்தை கேட்டுவிடுவானோ? அவனுக்கு என்ன விதமான பதில் சொல்ல வேண்டுமோ? அச்சப்பட்டுக் கொண்டிருந்தவளுக்கு ரவி உறங்கிவிட்டது ஆறுதலைக் கொடுத்தது.

**வா**சலில் காமாட்சியம்மாள் நாராயணீயத்தை முணு முணுத்தபடியே பன்னீர் மரத்திலிருந்து உதிர்ந்த மலர்களையெல்லாம் ஒவ்வொன்றாக எடுத்துக் கூடையில் போட்டுக் கொண்டிருந்தாள். எழும்பி வரும் சூரியனின் பொன்னொளியில் தூரத்தே தெரிந்த குருவாயூரப்பன் கோயில் கலசங்கள் பளபளவென மின்னின. கிருஷ்ண சாஸ்திரிகள் கோயிற் பிரசாதமான சந்தனம் துளசி இரண்டையும் கையில் ஏந்தியவாறே வீட்டுக்குள் நுழைந்தார். ''ஊர்மிளா!— எங்கே குழந்தைகள்? வீட்டில் சத்தமே யில்லையே!'' என்று வினவியபடியே துளசி தளத்தை அவள் கையில் கொடுத்தார்.

''ராணி அம்முக்குட்டியோடு கடைக்குப் போயிருக்கிறாள். ரவி இங்கேதான் எங்கேயோ படித்துக் கொண்டிருந்தான்'' என்ற ஊர்மிளா தந்தை கொடுத்த துளசிதளத்தைத் தலையில் சூடிக் கொண்டாள்.

கால்களைக் கழுவிக் கொண்டு கூடத்துக்குள் நுழைந்த கிழவர் அங்கேயிருந்த ஊஞ்சலில் உட்கார்ந்தார். அவரைத் தொடர்ந்து ஊர்மிளையின் தாயும் அப்படியே சுவரோரமாக உட்கார்ந்து மலர்களைக் கீழே கொட்டித் தொடுக்கவாரம்பித்தாள்.

''ஊர்மி!... கப்புணியாத்து ராகவனைக் கோயிலில் கண்டேன். நேற்றுத்தான் பம்பாயிலிருந்து வந்தானாம்...'' மூக்குக் கண்ணாடியைத் தூக்கி வைத்துக் கொண்டு இங்கே சற்று நிறுத்தினார். அவர் குரல் சற்றே சிலும்பியது.

ஊஞ்சலருகே வந்து சங்கிலியைப் பிடித்தபடியே தந்தையை நோக்கினாள் ஊர்மிளை. அவள் முகத்தில் எவ்விதமான உணர்ச்சியும் தெரியவில்லை.

தொடர்ந்தார் கிழவர்.

''மாப்பிள்ளையின் உடம்பு துரும்பாயிருக்காம். வேலை செய்ய முடியாமல் பாதி நாள் லீவு போட்டு விட்டு வீட்டோடு இருக்கிறாராம்....''

''இருக்கட்டுமே! நமக்கென்ன?''

''ஊர்மி! அப்படிச் சொல்லாதேம்மா... ஏதோ நடந்து விட்டது.... அதற்காக....''

''அப்பா! நான் முடிவாகச் சொல்லுகிறேன். நீங்கள் வேண்டுமானால் மாப்பிள்ளை உறவு கொண்டாடுங்கள். இனிமேல் எனக்கும் அவருக்கும் எந்த விதமான பந்தமும் இந்த ஜன்மத்தில் கிடையாது. நானும் என் குழந்தைகளும் எப்படியோ பிழைத்துக் கொள்கிறோம். அதைத் தீர்மானம் பண்ணிக் கொண்டுதான் பம்பாயிலிருந்து வரும் பொழுது ஒரு துரும்புகூட எடுத்து வராமல் வந்துவிட்டேன்! எனக்கு அவரைப் பற்றிய ஒரு விவரமும் தெரிந்து கொள்ள விருப்பமில்லை. என்னிடம் இது பற்றி இனிமேல் பேசி என் நெஞ்சைக் குத்திக் கிளறாதீர்கள்.''

இதைக் கூறிவிட்டு விடுவிடு என்று உள்ளே போய் விட்டாள் ஊர்மிளா.

காமாட்சியம்மாள் தன் விழிகளில் துளித்த கண்ணீரைப் புடவைத் தலைப்பால் துடைத்துக் கொண்டாள்.

''ஊர்மி! நான் சொல்வதைக் கேட்டு விட்டு அப்புறம் உன் இஷ்டம் போல் செய்து கொள்.''

வேகமாக வெளியே வந்தாள் ஊர்மிளை.

எத்தனையோ நாட்களாகக் குமுறிக்கொண்டிருந்த எரிமலையொன்று தீயும் புகையுமாக வெடிக்கத் தயாராகி விட்டது போலிருந்தது அவளுடைய தோற்றம்.

''அம்மா! இதைப் பார்!... பார்த்து விட்டு நீ என்ன சொல்ல விரும்புகிறாயோ, அதைச் சொல்லு...''

ஆவேசம் வந்தவள் போல் படபடவென்று முடித்திருந்த தன் அடர்ந்த கூந்தலை அவிழ்த்துவிட்டுத் திரும்பினாள். அவளுடைய தலையின் பின்புறம் நீண்டு சிவந்த வடு ஒன்று. ''இது என்னவென்று அன்றொரு நாள் நீ கேட்டாயல்லவா? உன் அழகான மாப்பிள்ளை ஒரு நாள் மூக்கு முட்டக் குடித்து விட்டு விஸ்கிப் பாட்டிலால் அடித்த காயம்! இது மட்டுமல்ல அம்மா! இன்னும் என் முதுகிலும் மார்பிலும் நிறையக் காயங்கள் இருக்கின்றன. ரவி எனக்கும் அவருக்கும் இடையில் வந்தபோது அவனை ஏறக்குறைய கொன்றேவிட்டார்!.... அம்மா! நீயும் அப்பாவும் உங்கள் கையால் என்னையும் குழந்தைகளையும் கொன்று போட்டு விடுங்கள். எனக்குச் சம்மதம்! ஆனால் அவர் கையால் சாவதற்கு என்னால் முடியாது! குழந்தைகளையும் அவர் கண்ணில் இனிமேல் காட்ட மாட்டேன்! இது நிச்சயம்.'' — பாறை போன்ற உறுதியுடன் பேசிவிட்டு அவிழ்ந்து புரண்ட கூந்தலைத் தூக்கி முடிந்துகொண்டு வந்த வேகத்தில் உள்ளே போய்விட்டாள்.

காமாட்சியம்மாள் தன் கணவனை நோக்கினாள். ''அவள் சொல்வது உண்மைதான்! ஊர்மிளை இனி அங்கே வரமாட்டாளென்று ராகவனிடம் சொல்லி யனுப்பிவிடுங்கள்! நாய்ஸ்லோ, கேஸ்லோ — யாரையோ கட்டிக் கொண்டு அழுதாலுமே! அவனையே



**hmt**யின்
கலமஸ்ஸேரி (கேரளா) யூனிட்
ஜூலை 1ந் தேதி
பாரதப் பிரதமர்

# ஸ்ரீமதி இந்திரா காந்தி

அவர்களால் துவக்கி வைக்கப்பட்டது.

இந்த ஏழரை கோடி ரூபாய் தொழில் திட்டம், முற்றிலும் எச்எம்டியின் சொந்த நிதி வசதியைக் கொண்டே உருவாக்கி நிர்மாணிக்கப்பட்டதாகும். இந்திய பொறியியல் வல்லுனர்களே திட்டமிட்டு அமைத்த இத் தொழிலகம் எச்எம்டி ஊழியர்களும் நிர்வாகிகளும் உவந்தளித்த [illegible] உயிர்ச் சின்னமாக விளங்குகின்றது.

கலமஸ்ஸேரி யூனிட்டில் சென்டர் லேத்துகள், காப்பியிங் லேத்துகள், ஹெக்ஸாகனல் டர்ரட் லேத்துகள் மற்றும் டிரம்டர்ரட் லேத்துகள் சர்வதேசத் தரத் திட்டத்தின் பிரகாரம் பூர்வாங்கத் தேர்வு மற்றும் மெக்போர்டு அட்டவணை உதவியுடன் உற்பத்தி செய்யப்படும்.

தொகுதிவாரியாகவும், ஏராளமான எண்ணிக்கையிலும் தயாரிக்கும் தகுதியுடைய இந்த லேத்துகள் கணக்கும் பிசகாத அளவு நுட்பத்துடனும், பளபள வென்று ஒளி வீசும் அழகுடனும் தயாரிக்க வல்லவை.

**இதர உற்பத்திகள் :**
மில்லிங் மெஷின்கள், ரேடியல் டிரில்கள் — ஹைட்ராலிக் சிலிண்டிரிகல் கிரைண்டர் — மின்சாரத்தால் இயங்கும் மில்லிங் மெஷின்கள் — லேத்துகள்;







**hmt**

ஹிந்துஸ்தான் மெஷின் டூல்ஸ் லிட்.,
தொழிற்சாலைகள் : I & II : பெங்களூர் (மைசூர்) III : பிஞ்சோர் (பஞ்சாப்)
IV : கலமஸ்ஸேரி (கேரளா) V : ஹைதராபாத் (ஆந்திர பிரதேசம்)

வைத்துக் கொண்டு இனிமேல் குடித்தனம் பண்ணட்டும். முன்பே எனக்கு மீண்டும் ஊர்மிளையைப் பம்பாய்க்கு அனுப்பச் சம்மத மில்லை. ஆனால் புருஷன் பெண்டாட்டிக் கிடையில் நாம் புகுந்துகொள்ள வேண்டாம், அவளுக்குப் பிரியமிருந்தால் திரும்பிப் போகட்டும் என எண்ணினேன். அவளுக்கே இஷ்டமில்லாதபோது நாம் எதற்கு வற்புறுத் தணும்? குழந்தைகளும் அவளும் இங்கேயே இருந்து கொள்ளட்டும். இதுதான் இனி மேல் அவர்களுடைய வீடு! மாப்பிள்ளை இனி மேல் நமக்கு உறவில்லை. மறந்துவிடுங்கள்!''

மகளைத் தொடர்ந்து காமாட்சியம்மாளும் உள்ளே போய்விட்டாள். விஷயம் தீர்ந்து விட்டதை உணர்ந்து ஒரு பெருமூச்செறிந்த படி கிருஷ்ண சாஸ்திரிகள் ஜன்னல் வழியே வெளியே பார்த்தார். அங்கே நின்ற குழந்தை ராணி ஒரு மாம்பிஞ்சைக் கையில் வைத்துக் கொண்டு அதைத் தன் அரிசிப் பற்களால் பதம் பார்த்தபடியே கலகலவென்று தாத் தாவைப் பார்த்துச் சிரித்தாள்.

வாசற்புறத்தறையில் ஊர்மிளாவின் மகன் ரவி அம்மா சொல்லிக் கொடுத்த பாரதி யார் பாட்டை அர்த்தம் புரியாமலே ஒப்பித் துக் கொண்டிருந்தான்:

''...கற்பு நிலையென்று சொல்ல வந்தார்—
இரு கட்சிக்கும் அஃது பொதுவில்
வைப்போம்....!''



# ஊர் வம்பு

* சிந்தனைக்குரிய விஷயம்!
* ரூ. மந்திரக்காளி!

ஆக்ராவில் பஸ் ஒன்று தீப்பிடித்துக் கொள்ள உள்ளே இருந்தோரில் நாற்பது பேர்கள் இறந்து போயினர். மேலும் முப்பது பேர்கள் பயங்கரத் தீப்புண்களுடன் ஆஸ் பத்திரியில் அனுமதிக்கப் பட்டனர். அடுத் தடுத்த இரண்டு நாட்களில் ஓர் ஆணும் ஒரு பெண்ணும் லாரி ஏறியதால் மாண்டு போனார்கள், சென்னையில்.

இச்சம்பவங்கள் மிகச்சிறிய எழுத்துக்களில் எங்கோ ஒரு மூலையில் கண்ணுக்குப் புலனாகாத வகையில் தினத்தாள்களில் பிரசுரமாகின்றன.

ஆனால் இதே தினத்தாள்கள், ஒரு ரயில் விபத்தோ அல்லது விமான விபத்தோ ஏற் பட்டு விட்டால் அச்செய்தியை முதல் பக்கத் தில் பெரிய கொட்டை எழுத்துக்களாலான தலைப்புக்குக் கீழே பிரசுரிக்கின்றன.

உண்மையில் கணக்கெடுத்துப் பார்ப் போமேயானால், மொத்தத்தில் ஓர் ஆண்டில் விமான விபத்துக்கள், ரயில் விபத்துக்கள் இவற்றில் மரணமடைபவர்களின் எண்ணிக் கையை விட மோட்டார் கார், ஸ்கூட்டர், லாரி போன்ற வாகனங்களால் ஏற்படும் விபத் துக்களில் இறப்போரின் எண்ணிக்கையே பன் மடங்கு அதிகமாயிருக்கும்.

ஆனால் எதனாலோ மனிதமனம் பின்னதைச் சிறிதுபடுத்தவும் முன்னதை மிகைப் படுத்த வும் யத்தனிக்கிறது. மேல் நாட்டார் இப்படி ஏமாந்து போவதில்லை; பாரபட்சத்துக்கு இடமளிப்பதில்லை. இங்கிலாந்தில் லண்டனி லிருந்து வெளியாகும் மிகப் பெரிய தேசிய நாளிதழ்களைத் தவிர மற்ற எல்லா தினசரிப் பத்திரிகைகளும், விமான விபத்துக்குத் தரும் அளவுக்கு முக்கியத்வத்தை ஒரு மோட்டார் சைக்கிள் விபத்துக்கும் கொடுக்கின்றன. அந்த விபத்தில் ஒரே ஒரு நபர் தான் உயிர் துறந்தார் என்றாலும் இந்தக் கொள்கை மாறு வதில்லை. இதனால், மோட்டார்கள் போன்ற வாகனங்களை ஓட்டுவோர் எச்சரிக்கப் படு கிறார்கள்; ஜாக்கிரதையாக வாகனத்தைச் செலுத்த வேண்டும் என்ற எண்ணம் அவர் களுக்கு ஏற்படுகிறது: விபத்துக்கள் குறை கின்றன என்றெல்லாம் பத்திரிகைக்காரர்கள் நம்புகிறார்கள்.

நம்முடைய சிந்தனைக்கு உரிய விஷயம் இது.

மேல் நாட்டாரைப் போலவே 'மாஜிக் ஷோ'வை மேடையேற்றி வருகிறார் திரு பாக்கியநாத் அவர்கள். எம். ஏ. பட்டதாரி யான இவர் இந்தக் கலையை ஆர்வத்துடன் பயின்று, இதில் பிரபலமான பலருடைய அனுபவங்களைப் படித்தறிந்து, நாடகம், நாட் டியம் இவைகளைப் பார்ப்பதைப் போல் மூன்று மணி நேரம் 'மாஜிக் ஷோ'வை ரசித்துப் பார்க்கும்படியாகத் தம் 'வேலைத்தன'ங்களை அமைத்திருக்கிறார். இதைத் திட்டமிட்டு நடத்த ஏராளமான உபகரணங்களையும், உடையணிகளையும், வண்ண விளக்குகளையும் பின்னணி ஒலி இசைகளையும் தயாரித்திருக் கிறார். 'மந்திரம் கால் மதி முக்கால்' என்று ஒரு பழமொழி உண்டு நம் நாட்டில். திரு பாக்கியநாத் அவர்களிடமோ முழுவதுமே மதிதான் என்பதை அவரே சில காட்சிகளின் ரகசியங்களை விளக்கி நிரூபிக்கிறார். பல காட்சிகளில் தம்முடைய அருமை மகளையே பயன்படுத்துகிறார். குறுகுறுப்பும் சிரித்த முகமும் கொண்ட அவள் ரசிகர்களின் நினைவில் இடம் பெற்று விடுகிறாள்.



## அத்தியாயம் நான்கு

# பேராசைப் பெருங்கனவு

நாகம நாயக்கரும் கமலா தேவியும் சாளுவ நரசிம்மரின் மாளிகையை விட்டுப் புறப்பட்ட பிறகு, லட்சுமியின் தாயார் கேசவம்மா மெள்ளச் சாளுவரின் கூடத்துக்குள் நுழைந்தார். வழக்கமாக அந்தக் கூடத்துக்குள் அவர் நுழைவதில்லை. அவருடைய உலகம் தனி உலகம்; அது அந்தப்புர உலகம். பயபக்தி என்ற சொற்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியவர் அவர். சாளுவ நரசிம்மர் எதைக் கூறினாலும், எதைச் செய்தாலும் கேசவம்மா சிறிதும் குறுக்கிடுவதில்லை.

கேசவம்மா எதிர்பார்த்துக் கொண்டிருந்த அந்த நாள் வந்து விட்டதால் அவருக்குச் சாளுவரின் கூடத்துக்குள் நுழையும் துணிவு பிறந்து விட்டது. கமலா தேவி தம்மிடம் பேசிய செய்திகளைத் தம் கணவரிடம் கூறுவதற்கும் அவரது கருத்தை அறிந்து கொள்வதற்கும் அவருக்கு ஆவல் எழுந்தது.

பெரியவர்கள் மனம் விட்டுப் பேச வேண்டுமென்பதற்காக லட்சுமியும், நாகமர் அங்கு வந்திருந்த சமயத்தில் மேல் மாடத்துக்குச் சென்றுவிட்டாள். அவளுடைய உடல்தான் மேல் மாடத்திலிருந்ததேதவிர, உயிர் சாளுவரின் கூடத்துக்குள்தான் சுற்றிக் கொண்டிருந்தது. அவளுடைய அன்னையாரின் விருப்பத்தை அவள் முன்னமே அறிந்திருந்தாள். ஆனால் அந்த மாளிகைக்குள் யாருடைய விருப்பம் எப்படிப் பட்டதாக இருந்தாலும் முடிவு சாளுவ நரசிம்மருடையது தான் என்பது லட்சுமிக்குத் தெரியும்.

'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்பது போல் அவரின்றி அந்த மாளிகைக்குள் ஒரு துரும்பும் அசைந்ததில்லை. நாடாளும் கலை கற்றறிந்ததோடு அவர் வீடாளும் கலையிலும் வல்லவராக இருந்தார்.

ஆகவே லட்சுமி மெல்ல மேல் மாடத்திலிருந்து இறங்கி வந்து கூடத்தில் நடைபெறும் பேச்சைக் கேட்பதற்காகச் சாளரத்தருகே மறைவாக ஒதுங்கி நின்றாள். அவளுடைய அன்னையாரைக் கண்டவுடன் அப்பா, ''வா, என்ன சேதி?'' என்று கேட்டது அவள் செவியில் விழுந்தது.

கேசவம்மா தரையில் சாளுவ நரசிம்மரின் காலடியில் அமர்ந்தார். தாம்பூலத்தை மடித்து அமைச்சரிடம் நீட்டியவாறே, ''அண்ணா பெண் கேட்பதற்கு வந்திருந்தார்கள் போலிருக்கிறதே!'' என்று தொடங்கினார்.

''ஆமாம்'' என்று சொல்லிவிட்டு நீண்ட பெருமூச்சு விட்டார் சாளுவநரசிம்மர். பிறகு நீண்ட மௌனத்தில் ஆழ்ந்தார்.

''நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ அதுதான் நடக்கப் போகிறது. நீங்களும் நம் பெண்ணை அங்குதான் கொடுக்க வேண்டு





மென்று சொல்லி வந்திருக்கிறீர்கள். ஆனால் இப்போது நீங்கள் யோசனை செய்வதைப் பார்த்தால்...''

''யோசிக்க வேண்டிய அவசியம் வந்திருக்கிறது'' என்றார்.

''உங்கள் மனத்தில் என்ன இருக்கிறது என்று நான் தெரிந்து கொள்ளலாமா?'' என்று ஏக்கத்தோடு கேட்டார் கேசவம்மா. 'சமுத்திரத்தின் ஆழத்தையாவது கண்டு பிடித்து விடலாம்; சாளுவ நரசிம்மரின் நெஞ்சாழத்தைக் கண்டு பிடிக்க முடியாது' என்று பலர் அவரைப் பற்றிப் பேசிக் கொள்வது வழக்கம். கேசவம்மாளுக்குமே அவர் அப்படித்தான் காட்சியளித்தார்.

சாளுவ நரசிம்மருக்கு அந்தச் சமயத்தில் லட்சுமி அருகில்தான் இருக்க வேண்டும் என்ற சந்தேகம் ஏற்பட்டது. சாளரத்தருகில் நிழலாடுவதைக் கண்டு 'லட்சுமி மறைந்து நிற்பதைத் தெரிந்து கொண்டு விட்டார். தம்முடைய மனைவிக்குக் கூறுவதுபோல் லட்சுமியின் செவிகளிலும் விழும்படியாக உரக்கப் பேசினார் சாளுவ நரசிம்மர்.

''கேசவம்மா! லட்சுமியை நான் மற்ற விஜயநகரத்துப் பெண்களைப் போல் வளர்க்கவில்லை. அப்படி அவளை வளர்த்திருந்தால் இதற்குள் ஏதாவது அமரநாயக்கரின் மாளிகையில் அவள் புகுந்திருப்பாள். சிறு

வயதிலேயே அவனை நாம் யாருக்காவது மணம் முடித்துக் கொடுத்திருக்கலாம். ஆனால் அவனை நான் கூடியவரையில் அறிவும் திறமையும் உள்ளவனாக வளர்த்திருக்கிறேன். அரசியல் விஷயங்களிலும் அவன் என்னிடம் பயிற்சி பெற்றிருக்கிறான்.''

''விசுவநாதனும் அறிவும் திறமையும் உள்ள பிள்ளைதானே?'' என்றார் கேசவம்மா.

''குறுக்கே பேசாதே!'' என்று சற்றுக் கோபமாகத் தம்முடைய மனைவியைத் தடுத்து விட்டு அவர் மேலே பேசலானார். ''அறிவும் திறமையும் மட்டும் ஒருவனுக்கு இருந்து பயனில்லை. அந்த அறிவையும் திறமையையும் அவன் செயலாக்கி வாழ்க்கையில் முன்னேற வேண்டும். நம்முடைய குமாரத்தி மற்றவருக்குக் கைகட்டி ஊழியம் செய்யும் ஒருவனுக்கு மனைவியாக இருப்பதை விட, ஒரு சாம்ராஜ்யத்தையே கட்டியாளக் கூடியவனின் அரசமாதேவியாக இருக்க வேண்டுமென்று நான் ஆசைப்படுகிறேன். நமக்குத்தான் ஆண் குழந்தைகள் பிறக்கவில்லையென்றால், அவளுக்குப் பிறக்கும் பிள்ளையாவது சிங்காதனத்தில் அமரக்கூடிய பிள்ளையாக இருக்க வேண்டும்.''

கேசவம்மாளுக்கு ஒன்றுமே புரியவில்லை. மறைந்து நின்ற லட்சுமிக்கு மட்டும் ஓரளவு புரிந்தது. புரியாமல் விழித்த கேசவம்மாள், ''அப்படியானால் உங்கள் மனத்தில் அச்சுதராயர் இருப்பார் போலிருக்கிறது'' என்று மெல்லக் கூறினார்.

சாளுவ நரசிம்மர் அலட்சியமாகச் சிரித்தார். ''அச்சுதராயருக்கும் ஆசைதான். ஆனால் அவருக்குக் கொடுப்பதை மற்ற அமரநாயக்கர்கள் பொறுத்துக் கொண்டிருக்க மாட்டார்கள். ஏற்கனவே அவருக்கொரு மனைவி இருக்கிறாள் என்றாலும், அந்தக் கோழைக்கு நான் லட்சுமியைக் கொடுக்க விரும்பவில்லை. சரிந்து விழப் போகிற சாம்ராஜ்யத்துக்கு முட்டுக் கொடுத்து நிற்பதற்குக்கூட அவருக்கு ஆற்றல் போதாது. கிருஷ்ணதேவராயரோடு எனக்கு இந்த சாம்ராஜ்யத்திலும் நம்பிக்கை போய் விட்டது.''

கேசவம்மாளுக்கு எப்படியாவது சாளுவரின் நெஞ்சிலிருக்கும் இரகசியத்தை வெளியில் கொண்டு வந்துவிட வேண்டுமென்ற துடிப்பு ஏற்பட்டது. சாளுவ நரசிம்மரும் அதை அவ்வளவாக மறைக்கத் துணியவில்லை. லட்சுமியிடம் நேரடியாகக் கூறமுடியாத விஷயங்களைக் கேசவம்மாளிடம் கூறுவது போல் லட்சுமிக்குக் கூற முனைந்தார் அவர்.

''விசுவநாதனிடம் நான் இன்னும் நம்பிக்கை இழந்து விடவில்லை. கிருஷ்ணதேவராயருக்குப் பிறகு அவன் மட்டும் ஆட்சிப் பொறுப்புக்கு வரக் கூடியவனாக இருந்திருந்தால், இந்த விஜயநகரத்தை இன்னும் சிறந்த சாம்ராஜ்யமாகச் செய்துவிடுவான். ஆனால் அவனிடமுள்ள ஒரே ஒரு குறை அவன் வலிமை அவனுக்கே தெரியாது! அதை நான் எடுத்துச் சொல்லியும் அவன் கேட்கவில்லை!''

லட்சுமியின் உள்ளத்துக்குள்ளே மீண்டும் நம்பிக்கை தளிர்விடத் தொடங்கியது. கேசவம்மாளின் முகத்திலும் புன்னகை படர்ந்தது.

''முன்பு நான் கொடுத்த ஒரு வாய்ப்பை அவன் பயன்படுத்திக் கொள்ளவில்லை. அதனால் அவனை அடியோடு புறக்கணித்துவிட்டு அவனுக்குப் பதிலாக வேறொருவனை நிச்சயம் கூடச் செய்துவிட்டேன். இருந்தாலும் மனம் கேட்கவில்லை. இன்னும் ஒரே ஒரு வாய்ப்பு—கடைசி வாய்ப்பு அவனுக்கு நான் கொடுத்திருக்கிறேன். இதைப் போல் அவன் வாழ்வில் அவனுக்கு மீண்டும் ஒரு வாய்ப்புக் கிடைக்கப் போவதில்லை. இதில் அவன் வெற்றி பெற்றால், அவனுக்கு ஒரு சாம்ராஜ்யத்தோடு லட்சுமியும் கிடைப்பாள்... இல்லாவிட்டால்....இல்லாவிட்டால்...''

அதற்கு மேல் சாளுவ நரசிம்மரால் பேச முடியவில்லை.

'அப்பா! அது என்ன வாய்ப்பென்று சொல்லுங்கள். இப்போதே சொல்லி விடுங்கள். சொல்ல மாட்டீர்களா?' என்று தனக்குத் தானே பதற்றத்தோடு கேட்டுக் கொண்டாள் லட்சுமி. வெளிப்படையாகவே கூடத்துக்குள் ஓடிவந்து அதை அவரிடம் கேட்டுவிட வேண்டும் போலிருந்தது அவளுக்கு.

''யாருமே அவனைப் படைகளோடு பாண்டிய நாட்டுக்கு இப்போது அனுப்ப விரும்பவில்லை. எல்லோருமே இதை எதிர்த்தார்கள். நான்தான் இதைச் செய்திருக்கிறேன். பெரும் படைகளோடும் திரவியக் குவியலோடும் அவனை நான் தெற்கே போகச் சொல்வது வெறும் கலவரங்களை அடக்குவதற்காக அல்ல. நம் குமாரத்தியைக் கொடுப்பதற்கு முன்பே அவனுக்கு இப்போது பாண்டிய நாட்டை ஸ்ரீதனமாக வழங்கியிருக்கிறேன். நாளைக்குச் சோழ நாட்டையும் வழங்குவேன்! அவன் வேறொன்றும் செய்ய வேண்டாம். நான் விரும்பிக் கொடுக்கும் நாடுகளை ஏற்றுக்கொண்டால் போதும்!''

ஆனந்தக் கண்ணீர் அருவியாகப் பாய்ந்தது லட்சுமிக்கு. முன்பொரு நாள் சாளுவ நரசிம்மர் குறி பார்ப்பவரை அழைத்து வந்து விசுவநாதனின் கரத்தைப் பார்க்கச் செய்தது அவளுக்கு நினைவு வந்தது. தன் தந்தையைப் பற்றித் தவறாக நினைத்ததற்காக அவள் தன்னையே நொந்து கொண்டாள்.

திடீரென்று சாளுவர் எழுந்து கூடத்துக்குள் குறுக்கும் நெடுக்கும் நடந்தார். ஆவேசம் கொண்டவர் போல் கேசவம்மாளிடம் பேசினார்.

''இதோ பார்! ஆண்களுக்குச் சில சமயம் அவர்களுடைய ஆற்றல் புலப்படுவதில்லை. நம்முடைய லட்சுமியும் விவேகமுள்ள பெண்ணாக இருந்திருந்தால் அவனிடம் சக்கரவர்த்தியாக வேண்டும் என்ற ஆசையைத் தூண்டி விட்டிருப்பாள். பெண்ணின் தூண்டுதலால்தான் ஆண்கள் உலகத்தில் பல அற்புதங்களைச் சாதிக்கிறார்கள். இந்த விஷயத்தில் லட்சுமியும் பேதையாகவே இருக்கிறாள். அதனால்தான் என் மனத்தில்கூடச் சேர நாட்டு உதய மார்த்தாண்டனிடம் ஓர் சலனம் ஏற்பட்டது. அவனுக்கு விசுவநாதனைவிட ஆற்றல் குறைவுதான்! ஆனா

னும் விரைவில் அவன் அதை வளர்த்துக் கொண்டு விடுவான்.''

''நீங்களே உங்கள் குமாரத்தியிடம் கூறுவதுதானே?'' என்றார் கேசவம்மா.

''அவளே தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் இவை. விசுவநாதனிடம் அவளுக்கு ஆழ்ந்த அன்பிருந்தால், அவளே அவனைச் சக்கரவர்த்தியாக உயர்த்திவிடுவாள்!'' என்றார் சாளுவ நரசிம்மர்.

இதைக் கேட்டதும் லட்சுமியின் உள்ளம் அப்போதே சிறகடித்துப் பறக்கத் தொடங்கி விட்டது.

## அத்தியாயம் ஐந்து

# பிரிவுக்கு முன்னே...

அரியநாத முதலியார் சந்திரசேகர பாண்டியரோடும், ஒரு லட்சம் படைவீரர்களோடும் விஜயநகரத்தை விட்டு முன்னதாகவே புறப்பட்டு விட்டார். அடுத்தாற்போல் பொக்கிஷத்தோடும் வீரர்களோடும் விசுவநாதன் புறப்படுவதற்கான ஏற்பாடுகளை நாகம நாயக்கரும், சாளுவ நரசிம்மரும் சேர்ந்தே கவனிக்கத் தொடங்கினர். சாளுவ நரசிம்மர் விசுவநாதனைத் தெற்கே அனுப்புவதில் அளவுக்கு மீறிய உற்சாகம் காட்டியது நாகமருக்கு வியப்பைத் தரவில்லை.

அரண்மனைக்குள் ஏற்பட்டு வந்த மாறுதல்கள் நாளுக்கு நாள் சாளுவரது செல்வாக்கைக் குறைப்பனவாக இருந்தன. அங்கே ராமராயரது செல்வாக்கு வளரத் தொடங்கியது. கிருஷ்ணதேவராயரின் மருமகன் என்ற முறையில் அரசமாதேவியர் இருவரும் அவர் சார்பில் இருந்து அவர் செல்வாக்கு அங்கே வளர்வதற்குத் துணை செய்து வந்தனர்.

சாளுவ நரசிம்மரின் விருப்பப்படியெல்லாம் ஆணைகள் பிறப்பித்து வந்த சக்கரவர்த்தி அச்சுதராயர் திடீரென்று ராமராயர் பக்கம் சாயத் தொடங்கி விட்டார். ராமராயருக்கு விசுவநாதனைப் பாண்டிய நாட்டுக்கு அனுப்புவதில் சிறிதும் விருப்பமில்லை. எங்கே அவனைத் தடைசெய்து விடுவார்களோ என்ற அச்சத்தில் காரியங்களைக் கவனித்து வந்தார் அமைச்சர்.

அப்படித் தடை ஏதும் ஏற்பட்டு விடக்கூடாதென்பதற்காக அச்சுதராயரிடமும், சாளுவ நரசிம்மர் வேறொரு வகையில் அச்சமூட்டியிருந்தார்.

''தமிழர் — தெலுங்கர் என்ற துவேஷத்தோடு தெற்கே கலவரங்கள் தோன்றியிருக்கின்றன. அவற்றை அடக்குவதற்காக முதலில் சென்றிருப்பவரோ அரியநாத முதலியார். அவரைப் பற்றி நான் குறை கூற விரும்பவில்லை என்றாலும், அவரும் பாண்டியரும் கலகக்காரர்களுடன் சேர்ந்து கொண்டு விடுவார்களோ என்ற அச்சமும் எனக்கு ஏற்பட்டிருக்கிறது. விசுவநாதன் நம்முடைய பிள்ளை. அதனால்தான் அவனைக் கட்டாயம் நாம் அங்கே அனுப்ப வேண்டும் என்கிறேன்.''

அச்சுதராயர் அமைச்சரின் கூற்றை அப்படியே நம்பிவிட்டார். அதனால் இவ்விஷயத்தில் மட்டும் ராமராயர் கூறிய காரணங்கள் அவரிடம் எடுபடவில்லை.

விசுவநாதன் மதுரைக்குப் புறப்படவேண்டிய நாளும் குறித்தாகி விட்டது. அவன் அங்கேயே தங்கிவிட வேண்டுமென்பது தான் அமைச்சரின் திட்டம். அதற்கேற்றவாறு ஆணை பிறப்பிக்கச் செய்திருந்தார் அமைச்சர். சந்திரசேகர பாண்டியரால் நாட்டைக் கட்டுப்படுத்தி ஆள முடியாது என்பதால், அவருக்குத் துணையாக விசுவநாதன் அங்கே தங்கிவிட வேண்டும் என்பது புதிய சக்கரவர்த்தியின் கட்டளை.

விசுவநாதன் ஏனோ அமைதி குலைந்தவன் போலக் காணப்பட்டான். விஜயநகரத்தை விட்டுப் பல முறைகள் அவன் வெளியூர்களுக்குச் சென்றிருந்தாலும் அப்போதெல்லாம் அவனுக்கு இத்தகைய தவிப்பு ஏற்பட்டதில்லை. மேலும் லட்சுமியின் நினைவு வேறு அவனுக்குள் இனம் புரியாத துன்பத்தைக் கொடுத்துக் கொண்டிருந்தது. அவன் புறப்படுவதை அவள் சிறிதும் விரும்பவில்லை. அவள் தந்தையின் நோக்கத்தில் ஏதோ இரகசியம் இருக்கக் கூடும் என்றும் அவள் எச்சரிக்கை செய்திருந்தாள். இவையெல்லாம் சேர்ந்து அவனைப் பெரும் குழப்பத்தில் ஆழ்த்தியிருந்தன.

அவனுடைய பெற்றோர் இருவரும் லட்சுமியின் மாளிகைக்குச் சென்று வந்தது அவனுக்குத் தெரியும். அவர்கள் மகிழ்ச்சியோடு திரும்பி வந்தது அவனுக்கு ஆறுதல் அளித்தது. ஆனால் அவர்களும் அவனிடம் ஏதும் கூறவில்லை; அவனாகவும் அவர்களிடம் எதுவும் கேட்கவில்லை.

அடுத்த நாள் பொழுது புலர்ந்து சற்று நேரத்துக்கெல்லாம் லட்சுமியே அவனுடைய மாளிகைக்கு வந்து சேர்ந்தாள். அவளுடைய முகத்தின் மலர்ச்சி, நடையின் துள்ளல், உடையலங்காரம் இவற்றிலிருந்தே அவளுடைய மனப் போக்கை அவனால் அறிந்து கொள்ள முடிந்தது. சோகமும் கண்ணீருமாகத் தன்னிடம் வந்து அவள் கசிந்துருகுவாள் என்று அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். பிரிவுத் துயரம் தாங்காமல் வேதனையில் ஆழ்ந்துள்ள லட்சுமியை எதிர்பார்த்த விசுவநாதனுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை.

''மாமாவும் அத்தையும் நேற்று அங்கு வந்திருந்தார்களே உங்களுக்குத் தெரியுமா?'' என்று அவன் காதருகில் வந்து ரகசியமாகக் கேட்டாள் லட்சுமி; ''அவர்கள் உங்களிடம் ஏதாவது கூறினார்களா?''

லட்சுமியை அவ்வளவு உற்சாகமாக அவன் அதற்கு முன்பு கண்டதில்லை. காடு போன்ற அவள் தலையில் மலர்ந்திருந்த மல்லிகை அவனைக் கிறங்கச் செய்தது. பேசுவதற்கு நா எழாமல் அவளைக் கண் இமைக்காது பார்த்து நின்றான்.

"நாளைக்கு மறுநாள் புறப்படுகிறீர்களாமே! இன்றைக்கு உங்களுக்கு ஏதும் அரண்மனையில் வேலை இருக்கிறதா?"

"நாளைக்குச் சக்கரவர்த்திகளிடம் சென்று விடைபெற்றுக் கொள்ள வேண்டும். மற்ற ஏற்பாடுகளெல்லாம் முடிந்து விட்டன. இன்றைக்கு ஓய்வுதான்" என்றான் விசுவநாதன்.

"அப்படியானால் இன்றைக்கு முழுவதும் நான் உங்களுக்கு வேலை கொடுக்கிறேன். புறப்படுங்கள்!"

"எங்கே?"

"நம்முடைய சாம்ராஜ்யத்துக்குப் போய் வர வேண்டும்! பிறகு நாமிருவரும் ஒன்றாக ஆலயங்களுக்குச் சென்று வழிபட்டு வரவேண்டும். நானும் அப்பா அம்மா இருவரிடமுமே கூறிவிட்டு வந்திருக்கிறேன். நீங்களும் உங்கள் அன்னையாரிடம் கூறிவிட்டுப் புறப்படுங்கள், என்னோடு!"

"என்ன கூறிவிட்டு வந்திருக்கிறாய் நீ?"

"இன்று முழுவதும் என்னைத் தேட வேண்டாம். இளவரசர் பாண்டிய நாட்டுக்குப் புறப்படுவதால் அவரோடு பொழுது போக்கப் போகிறேன் என்று சொல்லி விட்டு வந்திருக்கிறேன். அப்பாவிடமே நேரில் போய்க் கேட்டு வந்தேன்!"

செருக்கும் துணிவுமாகப் பேசினாள் லட்சுமி. தங்களுக்குத் திருமணம் நிச்சயமாகி விட்டது போலும் என்று நினைத்துக் கொண்டான் விசுவநாதன்.

**சற்று** நேரத்துக்கெல்லாம் அவர்கள் இருவரும் அவர்களுடைய சாம்ராஜ்யத்தின் எல்லைக்குள் வந்து விட்டனர். மனித சஞ்சாரமில்லாத அந்தத் துங்கபத்திரா நதிக்கரையின் தனிமை அன்றைக்கு ஆனந்தமயமாக இருந்தது. புரண்டு செல்லும் ஆற்றின் இசையோடு பலவகைப் பறவை இனங்களின் பாடல்களும் ஒன்று சேர்ந்து கொண்டன. செடி கொடிகளை விலக்கிக் கொண்டும், மலைக் குகைகள் வழியே நுழைந்தும் அவர்கள் தங்களுடைய அரண்மனையை நாடி நடந்தார்கள். சுற்றிலும் சின்னஞ்சிறு பாறைகளால் சூழப்பெற்ற அந்த இடத்துக்குள் குத்துச் செடிகள் மலர்க் கூட்டமாகவே மாறி விட்டன.

"என்ன விஷயம் லட்சுமி?" என்று ஆவலோடு கேட்டான் விசுவநாதன்; "என்னிடம் அப்பாவோ அம்மாவோ ஒன்றுமே சொல்லவில்லை; அவர்களுடைய முகமலர்ச்சியைக் கண்டு நல்ல செய்தியாகத்தான் இருக்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டேன்!"

பாறையின் மீது சாய்ந்தவாறே அவர்கள் அருகில் அமர்ந்து பேசலானார்கள். லட்சுமியைப் பொறுத்த வரையில் தனக்கும் விசுவநாதனுக்கும் திருமணம் நடைபெற்றுவிட்டதாகவே நம்பினாள். அவளைப் பொறுத்த வரையில் விசுவநாதன் அவளுடைய கணவன். பிரிவுத் துயரம் அவள் உள்ளத்தின் ஆழத்தில் ஒருபுறம் அவளை முள்ளெனக் குத்திக் கொண்டுதான் இருந்தது. என்றாலும், அதை முற்றிலும் மறந்து அன்று முழுதும் அவனிடம் அவள் சிரித்துப் பேச விரும்பினாள்.

"சமுத்திரத்தின் ஆழத்தைக் கண்டுபிடித்தாலும் சாருவரது நெஞ்சாழத்தைக் கண்டு பிடிக்க முடியாதென்று சொல்வார்கள். அது எவ்வளவு உண்மை என்பது நேற்றுத்தான் எனக்கே தெரிந்தது."

"என்ன தெரிந்தது?" என்று பரபரப்போடு கேட்டான் விசுவநாதன்.

"அவசரத்தைப் பாருங்கள், அவசரத்தை!" என்று கூறித் தன் பல் தெரியச் சிரித்தாள் லட்சுமி.

"சொல், லட்சுமி!"

"நாம் எப்படி ஒருவர் மீது ஒருவர் உயிரையே வைத்திருக்கிறோமோ, அதே போல் என் அப்பாவும் நம் இருவர் மீதும் உயிரையே வைத்திருக்கிறார். நாம் சீரும் சிறப்புமாக வாழ வேண்டும் என்ற ஒரே நோக்கந்தான் அவருக்கு. நம்மைத் திருமணக் கோலத்தில் கண்டு களிக்கும் நாள்தான் அவருடைய பொன்னாள்."

விசுவநாதனுக்கு அந்தப் பொன்னாள் அப்போதே அங்கு உதயமாகி விட்டதுபோல் தோன்றியது.

"நிச்சயம் செய்து விட்டார்களா?"

"அந்த விழா தஞ்சையில் நடக்கப் போகிறது. நான் அப்போது தஞ்சையிலிருப்பேன். நீங்கள் மதுரையிலிருந்து அங்கு வருவீர்கள். மாமாவும் அத்தையும் விஜயநகரத்திலிருந்து அங்கு வருவார்கள். அப்பா அதையே ஒரு பெரிய விழாவாக நடத்த நினைத்திருக்கிறார்."

"தஞ்சையில் நடைபெறுமா?" என்று வியப்போடு கேட்டான் விசுவநாதன்.

"ஆம்; விரைவில் நாங்கள் அனைவருமே தஞ்சைக்கு வந்துவிடப் போகிறோம். எவ்வளவு காலந்தான் இனியும் நாம் பிரிந்திருப்பது? நீங்கள் மதுரையிலும் நான் விஜயநகரத்திலுமாக இருப்பதைவிட, உங்களுக்கு அருகிலேயே நான் சோழ நாட்டுக்கு வந்து விடப் போகிறேன்!"

"உண்மைதானா லட்சுமி?" என்று நம்ப முடியாமல் கேட்டான் விசுவநாதன்.

"அந்த நாள் விரைவில் வரவேண்டுமென்று நீங்களும் வேண்டிக் கொள்ளுங்கள்!" என்றாள் லட்சுமி. அவனுடைய கரங்கள் இரண்டையும் மெல்லப் பற்றி அவள் வெகு நேரம் வேடிக்கை பார்த்தாள். அந்தக் கரங்களில் ஓடிய ரேகைகளைப் பார்த்து முன்பொரு நாள் ஒரு வயோதிகர் குறி சொல்லியது அவள் நினைவுக்கு வந்தது. தன் அப்பா கூறியவற்றையும் அவள் மறந்துவிட வில்லை.

மெல்ல அந்தக் கரங்களைப் பற்றித் தன் இதழ்களில் வைத்துக் கொண்டாள். "என் வாழ்வே உங்களுடைய இந்தக் கரங்களில் தான் இருக்கிறது!" என்றாள் நாத் தழுதழுக்க. அதைக் கேட்ட பொழுது விசுவநாதனுக்கு மெய்சிலிர்த்தது. (தொடரும்)

# எதை நினைத்து அழுதாள்?

வசந்தாவின் வெறுங் கழுத்தைப் பார்த்துக் குமுறிக் குமுறி அழுதாள் பாட்டி. முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் அதே கோலத்துடன் பாட்டி அந்த வீட்டில் நுழைந்த நினைவு இன்னும் நெஞ்சில் உறுத்தியது.

''பூவும் பிஞ்சுமா இருக்க வேண்டியதை இப்படி உதிர்த்திட்டியேடா, ஈசுவரா...'' என்று பெருமூச்சு விட்டாள்.

இதையெல்லாம் இலட்சியம் செய்யாமல் உணர்ச்சியற்ற பொம்மையாக அந்த வீட்டில் திரிந்து கொண்டிருந்தாள் வசந்தா. எல்லாமே ஏதோ கனவுலகில் நடப்பவை போன்ற பிரமை. தனக்கு நேர்ந்துவிட்ட கொடுமையின் தன்மையைப் பூரணமாக உணர்ந்தவளாகக் கூடத் தெரியவில்லை.

தந்தியை வாசித்துவிட்டு, அவளுடைய அப்பா ராமசாமி அலறியபோதுகூட வசந்தாவால் அந்தச் சம்பவத்தின் விளைவுகளை உணர முடியவில்லை.

ஏதோ ஒரு விஷக் காய்ச்சலில் படுத்த ரமணி திடீரென்று மரணமடைந்துவிட்டான் என்ற செய்தியைப் பூரணமாக அவள் அறிவு ஜீரணித்துக் கொள்ள முடியாமல் தவித்தது.

கல்யாணமாகி மூன்று மாதங்கள் கூட ஆகவில்லை. அதற்குள் இவளை இப்படித் தனியே விட்டு விட்டுப் போய்ச் சேர்ந்து விட்டான். கணவன், மனைவிக்கு இடையில் பழகிப்பழகிப் பெருக வேண்டிய பாசம், இன்னும் துளிர் கூட விடவில்லை. வாழ்ந்ததெல்லாம் மூன்று மாதங்கள். தாம்பத்தியப் பிணைப்பு, பாசம் எல்லாம் ஒருவரை யொருவர் நெருங்கி வாழ்ந்து, புரிந்துகொண்ட பின் ஊறவேண்டிய உணர்வு. அதற்குச் சந்தர்ப்பம் அளிக்காமலே காலம் சதி செய்து விட்டது.

ஏதோ விளையாட வந்த தோழன் பிரிந்து விட்டதைப் போன்ற உணர்வுதான் தட்டியதே தவிர, வாழ்நாள் முழுதும் எண்ணி எண்ணி ஏங்க வேண்டிய துயரம் என்ற உணர்வு எழவே இல்லை!

ரமணியின் உயிரற்ற உடலைக் கண்டவுடன் விக்கித்து நின்றாள், வசந்தா. அழக்கூடத் தோன்றவில்லை. அவளைக் கட்டிக் கொண்டு பாட்டியும் அம்மாவும் கதறியபோதுதான் அவளுக்கும் கண்ணீர் வந்தது.

எல்லாம் முடிந்து விட்டது! இப்போது வசந்தா விதவை. இந்து சமுதாயத்தில் — பச்சையாகச் சொல்லப் போனால் — எந்த உணர்வுக்குமே இனி இடம் கொடுக்க உரிமை இல்லாதவள்.

ஆபிஸிலிருந்து திரும்பிய ராமசாமி, டையை நெகிழ்த்து விட்டுக் கொண்டு, கோட்டைக் கழற்றிக் கொண்டிருந்தார். ஊஞ்சலில் படுத்திருந்த பாட்டி எழுந்து உட்கார்ந்தாள்.

''ஏண்டா, ராமு, இப்போ பெண்களும் ரெண்டாந் தாரம் கல்யாணம் செஞ்சுக்கலாம்னு சட்டம் வந்திருக்காமே..?'' என்றாள்.

''உம்...உம்...'' என்று சுவாரசியமில்லாமல் முனகிக் கொண்டே ஸ்டாண்டில் கோட்டை மாட்டி விட்டு டையைக் கழற்ற முனைந்தார், ராமசாமி.

''நம்ம வசந்தாவுக்கும் அப்படி ஒரு கலியாணத்தை...'' பாட்டியால் முழுதும் பேசி முடிக்க முடியவில்லை. அவளோடு ஊறிவிட்ட பழமை அவள் நாவை உள் இழுத்தது. அறிவு வாதமிட்டாலும், இதுவரை பழமையில் மூழ்கிக் கிடந்த மனம் முரண்டியது.

''எவன் வரப் போறான்?'' என்று அசிரத்தையாகச் சொல்லிவிட்டுப் பின்புறம் போய் விட்டார், ராமசாமி. மகனின் அலட்சியம் பாட்டிக்கு வேதனையைக் கொடுத்தது.

பாட்டிக்கு மனத்தில் உறுத்தல். வீட்டுக்குள் வளைய வளைய வந்து கொண்டிருக்கும் வசந்தாவைப் பார்த்துப் பார்த்துப் பெருமூச்சு விட்டாள். பத்து வருஷங்கள் தாம்பத்திய வாழ்வை அனுபவித்துவிட்டு முப்பது ஆண்டுகளுக்கு முன் விதவைக் கோலத்தை ஏற்றபோது அதைத் தாங்க முடியாமல் அவள் மனத்தில் கீறல் விழுந்ததே. இவ்வளவுக்கும் பாட்டி தனி மரமாகி விடவில்லை. அப்போது ராமசாமிக்கு எட்டு வயது. துணைக்கு ஆண் பிள்ளை. இருந்தும், பாட்டி உணர்ந்தாளே வைதவ்யத்தின் கொடூரத்தை.

இந்தக் குழந்தை வசந்தா இதைத் தாங்குவாளா? ஈசுவரா! என்ன கொடுமையடா இது.....

ஒரு நாள் மத்தியானம் பாட்டி, மெதுவாக வசந்தாவின் அறைக்குள் நுழைந்தாள். பாட்டிக்கு உள்ளூற ஏதோ ஓர் ஆசை; ஒரு நம்பிக்கை! வசந்தாவுக்கு வாழ்வு கிடைத்துவிட வேண்டும் என்ற தவிப்பு.

வசந்தாவை வாஞ்சையுடன் அணைத்துக் கொண்டாள். ''உனக்குத் துரோகம் பண்ணிட்டாண்டி உன் அப்பன். நீ ஆசைப்பட்டபடியே பக்கத்து வீட்டு ரங்கனுக்கு உன்னைக் கொடுத்திருந்தால் இப்படி ஆகியிருக்குமா? எனக்கும் அப்போ துணிவில்லே... உம்... விதி. ஏண்டி, இப்பத்தான் என்ன கெட்டுப்போச்சு? அந்த ரங்கனிடம் கேட்டுப் பாரேண்டி...'' பாட்டி நம்பிக்கையுடன் பேசினாள்.

''இனிமே பேசி என்ன செய்ய?... காலம் கடந்து போச்சு'' என்றாள் வசந்தா மிகுந்த விரக்தியுடன்.

''எதுக்கும் கேட்டுப் பாரேண்டி.....உன் மேலே அந்தப் பிள்ளையாண்டான் உசிரையே வைச்சிருந்தான்... அதையெல்லாம் மறந்திருப்பானா?'' — பாட்டி பேத்தியின் காதில் கிசுகிசுத்தாள்.

''எல்லாம் கேட்டுப் பார்த்தாச்சு....'' என்றாள் வசந்தா வெறுப்புடன்.

''கேட்டுட்டயா? என்னடி சொன்னான்?''

''அவர் அப்பா சம்மதிக்க மாட்டாராம். அடுத்த மாசம் அவருக்குக் கலியாணம் நிச்சயமாயிருக்காம்'' என்றாள் வசந்தா.

பாட்டிக்கு இருந்த நம்பிக்கை உதிர்ந்து விட்டது. ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள்.

''அவன் எப்படிச் சம்மதிப்பான்? யார் தான் சம்மதிப்பாங்க. ஒருவனைக் கட்டி அறுத்த





கலைவணம்



வளை எவன் தீண்டுவான்? எல்லாம் விதியடி விதி....'' என்று முனகிக் கொண்டே அந்த அறையை விட்டு வெளியேறினாள் பாட்டி.

அவளுடைய நினைவில் முப்பது ஆண்டுகளுக்கு முன் அவள் விதவைக் கோலம் பூண்ட சம்பவம் வட்டமிட்டது. அந்த நினைவே கசந்தது. முப்பது ஆண்டுகளாக அதை வாழ்ந்து தீர்த்து விட்டாலும், பழைய நினைவு நெஞ்சில் கசந்தது. எந்தப் பெண்ணுக்கும் அந்த நிலை வரக்கூடாது என்று எண்ணி மறுகியவள், இன்று தன் பேத்தியை அது தீண்டி விட்ட கொடுமை தாளாமல் வெதும்பினாள்.

ரமணியைக் குளிப்பாட்டிக் கிடத்திவிட்டு வசந்தாவை இழுத்து வந்து பிணத்தின் காலடியில் கிடத்தியபோது, அவ்வளவு கூட்டத்தில் வசந்தா மீது யாரும் வெள்ளைச் சேலையைப் போடக் கூடாது என்று கை நீட்டி மறித்துத் தடுத்தவள் பாட்டி ஒருத்திதான். ஒடுங்கியே வாழ்ந்து மனத்தில் பழைமையின் வடு கிடந்தாலும் வாழ்வுக்கு ஆக்கமில்லாத செயலைத் தடுக்க அவள் அறிவு தூண்டி விட்டது.

தனக்கு நேர்ந்துவிட்ட அவக் கோலத்தை அந்தக் காலத்தில் தடுக்க வகையற்று, சக்தியற்றுச் சமூகப் பழக்கத்தின் இழுப்பில் சிக்கிவிட்ட பாட்டிக்கு, பேத்தியைக் காப்பாற்றிவிட வேண்டும் என்ற வெறி தோன்றி விட்டது!

மகளை வெள்ளை உடையில் அலங்கோலமாகக் காணப் போகிறோமே என்ற பதை பதைப்புடன் நின்று பொருமிக் கொண்டிருந்த வசந்தாவின் தாயார், கை நீட்டித் தடுத்து நின்ற பாட்டியை நன்றிப் பெருக்குடன் கட்டிக் கொண்டு 'கோ' வென்று கதறினாள்.

வைதவ்யம், வெறும் வெள்ளை உடையில் மட்டும்தானா? வசந்தாவின் கழுத்து சூனியமாயிருக்கிறதே...? துருதுருவென்றிருந்த அவள் பார்வை சூனியமாகி விட்டதே...? வாழ்வே ஒரு துணையின்றிச் சாரமற்றுச் சருகாகி சூனியத் தன்மையில் புதைந்து விட்டதே. வெள்ளைச் சேலையை மட்டும் தடுத்து விட்டு, வாழ்க்கையை வெளிறும்படி விட்டுவிடுவது வெள்ளைச் சேலையை விடக் கொடுமைதானே?

இதற்கு ஒரு வழி பிறக்காதா என்ற நம்பிக்கையில்தான் வசந்தாவின் அறைக்குள் சென்றாள் பாட்டி. ஆனால் ரங்கன் மறுத்து விட்டதைக் கேட்ட பிறகு, பாட்டிக்கு நம்பிக்கையற்று விட்டது. அதற்காக ரங்கன் மீது அவள் பழி சொல்லவில்லை. விதியின் மீது ஏற்றி விட்டாள்.

ஆனால் வசந்தாவுக்கு ரங்கன் மீது வெறுப்பே தோன்றியது. தந்தையின் பிடி

வாதத்துக்குத் தலை பணிந்து ரங்கனை அவள் உதற வேண்டிய நிர்ப்பந்தம் வந்தபோது கூட, அவன் அவளிடம் சொன்னானே:

''நீ எங்கே போனாலும் என் நெஞ்சை விட்டு மட்டும் போக முடியாது வசந்தா... இது சத்தியம்'' என்று கையடித்துச் சத்தியம் செய்தானே!

இப்போது அவன் நெஞ்சில் இவள் இல்லையா? அப்பா சம்மதிக்க மாட்டாராமே!

இவளுக்குத்தான் தந்தையை எதிர்க்கச் சக்தியில்லை, ரங்கனுக்குமா சக்தி யில்லை...?

பாட்டி சொன்னது சுளீர் என்று நெஞ்சில் உறைத்தது. — ''ஒருவனை கட்டி அறுத்த வளை எவன் தீண்டுவான்?...''

வெறும் உடலை மட்டுமே எண்ணிக் கொண்டு உறவாடுவதுதான் காதலா? உடலையும் தாண்டி உள்ளத்தோடு ஒட்டி விடவேண்டிய உறவல்லவா காதல்? ஆனால் இந்தக் காதல் எல்லாம் உடலோடு நின்று அதற்கும் அப்பால் செல்லச் சக்தியற்றுப் போன பிரமைதானா? இதைத்தானா தெய்வீகம் என்று ரங்கன் திரும்பத் திரும்ப உளறிக் கொண்டிருந்தான்?

வசந்தாவுக்குப் பழைய நினைவுகள் முள்ளாகக் குத்தின.

மாலையில் ராமசாமி வீடு திரும்பியபோது உற்சாகத்துடன் இருந்தார்.

''அம்மா, வசந்தாவுக்கு நல்ல காலம் வந்திருக்கம்மா!'' என்று கூறிக்கொண்டே பாட்டியின் பக்கத்தில் உட்கார்ந்தார். அவருடைய குரலைக் கேட்டு மாடிப்படியின் பக்கம் வந்து நின்று கொண்டு பேச்சை உற்றுக் கேட்டாள், வசந்தா.

''சம்பந்தி வீட்டிலிருந்து கடிதம் வந்திருக்கு'' என்றார் ராமசாமி.

''என்னது?'' — பாட்டி கேட்டாள்.

''மாப்பிள்ளை இறந்த பிறகு அவன் சொத்தெல்லாம் சட்டப்படி வசந்தாவுக்குத் தான் சொந்தம். முன்னாலே அவாளுக்குள்ளே பாகமாயிடுத்து. இந்தச் சொத்தை எப்படியும் திரும்ப வாங்கிடணும்னு போன வருஷம் சம்பந்தி வந்தார். லட்ச ரூபாய் ரொக்கமாய்க் கொடுத்திடறதாயும் வசந்தா விடுதலைப் பத்திரம் எழுதிக் கொடுத்திடணும்னும் சொன்னார். நான் சம்மதிக்கலை. வசந்தாவுக்கு நான்கு லட்ச ரூபாய் சொத்து கிடைச்சிருக்கு. எதுக்கு விடணும்? நான் முடியாதுன்னுட்டேன். இப்போ அவாளா ஒரு முடிவுக்கு வந்திருக்கா. வசந்தாவை மாப்பிள்ளையோட தம்பிக்குக் கலியாணம் செய்யச் சம்மதமாம்.''

''அதெப்படி, அதே வீட்டில் புருஷனோட தம்பியை....?'' என்று குறுக்கிட்டாள் வசந்தாவின் தாயார் அலமேலு.

''சட்டப்படி இந்தக் கலியாணம் செல்லும். எதையாவது குறுக்கே சொல்லாதே. வசந்தாவுக்குப் பத்தொன்பது வயசுகூட இன்னும் ஆகலை. உன் பொண்ணை ஆயுசு முழுதும் இப்படியே தனி மரமா வச்சுடப் போறியா?'' என்றார் ராமசாமி சற்று எரிச்சலுடன்.

''அதுக்காக...... புருஷனோட தம்பியையேவா....? வேறு எங்கேயாவது பார்த்து...'' என்று முகத்தைச் சுளித்தாள் அலமேலு.

''சரிதாண்டி... எவன் கட்டிக்க வரான்? ஏதோ இவாளுக்காவது இப்படித் தோணித்தே'' என்று எரிந்து விழுந்தார், ராமசாமி. பிறகு பாட்டியைப் பார்த்து ''நீ என்னம்மா சொல்றே?'' என்று கேட்டார்.

''என்னமோப்பா, குழந்தை பூவும் பொட்டுமா யிருக்கணும். என் ஆசை அவ்வளவுதான். அவளுக்கு எப்படியும் ஒரு துணை வேண்டியதுதான்'' என்றாள் பாட்டி.

''சொத்து வெளியே போயிடப்படாதுங்கறதுக்குத்தான் அவா இப்படிச் சொல்றா. கலியாணத்துக்கப்புறம் இவகிட்டேருந்து சொத்தையெல்லாம் எழுதி வாங்கிகிட்டு அனுப்பிடறதுக்குத்தான் இப்படிச் செய்யறாளோ என்னவோ?'' என்றாள் அலமேலு சந்தேகத்துடன்.

''அதுக்கு நான் விட்டுடுவேனா?''

''அவா பரந்த மனத்தோட இந்தக் கலியாணத்துக்குச் சம்மதிக்கிறதா எனக்குத் தெரியலை. ஏதோ சூட்டுக்காக...'' என்றாள் அலமேலு சலிப்புடன்.

''எதுக்கா இருந்தா என்ன? நமக்குக் காரியம் நடக்கணும். வேறு இடத்திலே அலைஞ்சு மாப்பிள்ளை பார்க்க முடியுமா இப்போ? எவனும் வரப் போறதில்லை. அவாளே வலிய வந்து சின்னவனுக்குப் பண்ணிக்கிறேன் என்று சொல்றபோது.... நான் அப்பவே சரின்னு எழுதிப் போட்டுட்டேன்'' என்றார் ராமசாமி.

''வசந்தாகிட்டேயும் ஒரு வார்த்தை கேட்டுக்க வேண்டாமா?''

''அவள்கிட்டே என்னடி கேள்வி? எல்லாம் முதல்லே ஒரு மாதிரி இருக்கும். போகப் போக எல்லாம் சரியாயிடும். நீ பேசாமல் இரு'' என்று கடுகடுத்தார் ராமசாமி.

மாடிப்படியருகில் நின்று கொண்டிருந்த வசந்தாவுக்குத் திகைப்பாக இருந்தது.

மீண்டும் கலியாணம்!

முதல் கலியாணம் அப்பாவுடைய ஆசைக்காக. இந்தக் கலியாணம் சொத்து ஒரே இடத்தில் முடங்குவதற்காக. எந்தத் திருமணமும் வசந்தாவுக்காக நடைபெறவில்லை. வசந்தாவுக்காக இப்போது நடத்தி வைக்கக் காதலைத் தெய்வீகம் என்று சத்தியம் செய்த ரங்கனே முன்வரவில்லையே; இந்தச் சுயநலமிகளா நடத்தி வைக்க முடியும்?

இந்தக் கலியாணத்துக்கு ரமணியின் தம்பி மாது சம்மதித்துவிட்டானா? பரந்த மனத்தோடு, அண்ணனின் மனைவிக்குப் புனர்வாழ்வளிக்க வேண்டும் என்ற நல்ல மனத்தோடுதான் இந்தக் கலியாணத்துக்கு ஒப்புக் கொண்டிருக்கிறானா? இல்லையென்றால் இந்த வியாபாரத்தில் இவனையும் கட்டாயப்படுத்தி ஒரு பங்காளியாக்கி விட்டார்களா?

'ஐயோ மாது, நீ வந்து என்னிடம் கேட்டிருந்தால், உன்னுடைய அண்ணாவின் சொத்தை ஒரு வரியில் உனக்கு எழுதிக் கொடுத்திருப்பேனே...'

வசந்தாவின் சிந்தனை தத்தளித்தது. அவளால் எதையுமே தீர்க்கமாகச் சிந்திக்க முடியவில்லை. இரண்டு ஆண்டுகளாக விதவைக் கோலத்தில் கசந்துவிட்ட வாழ்க்கை

யில் இப்போது இனிப்புக் கலக்கப் போகிறது என்ற எண்ணம்தான் தெம்பைக் கொடுத்தது. இந்த வீட்டில் தாய், தந்தை, பாட்டி இத்தனைபேர்கள் இருந்தும், தனிமையை உணர்ந்தவளுக்கு ஒரு துணை கிடைத்து விட்டது என்ற திருப்தி. இளமையின் ஆறையிலே சில சமயங்களில் அகப்பட்டுத் திணறியவளுக்கு இந்த மாற்றம் சற்று ஆறுதலளித்தது.

ஆனால் இதென்ன முறை? கணவனின் தம்பியை? இதற்கு முன் மன்னி, மன்னி என்று மரியாதையோடு கூப்பிட்டுக்கொண்டிருந்த மாதுவோடு மனைவி என்ற முறையில் எப்படிப் பழகுவது...?

அந்த வீட்டில் செய்து கொள்வதைவிட வேறு எவனாவது ஓர் எளிய குடும்பத்தில் உள்ளவனைக் கைப்பிடித்தாலாவது... பணத்துக்காகத்தானே இந்த ஏற்பாடு. இதில் இதயங்கள் ஒன்றுபடுமா? பணத்தின் சலசலப்பில் இதயத்தின் ஓலம் ஒடுங்கி விடும்.

வாழ்க்கையில் துணை கிடைத்து விட்டது. இனி அவள் தனி மரம் இல்லை.

**ப**டுக்கையறை அலங்காரம் பகட்டாக இல்லாவிட்டாலும் அழகாக அமைந்திருந்தது. கட்டிலின் ஓரத்தில் அமர்ந்திருந்த வசந்தாவின் மனத்தில் அமைதி இல்லை.

அது முதல் இரவு!.... இது...?

ஆர்வம், பரபரப்பு எதுவும் இல்லாது, ஒரு பொம்மை மாதிரி கட்டிலின் விளிம்பில் அமர்ந்திருந்த வசந்தாவுக்கு எல்லாமே கனவுலகில் நடப்பது போன்ற பிரமைதானிருந்தது. இரண்டு ஆண்டுகளுக்கு முன் இந்த வீட்டில் மருமகளாக நுழைந்த போதிருந்த கொண்டாட்டமும், கோலாகலமும் இப்போது இல்லை. ஏதோ ஒரு கடமையை முடிப்பது போலத்தான் அனைவரும் செயல்பட்டுக் கொண்டிருந்தார்கள். அந்தக் கடமைக்குள் முடங்கிவிட்ட பாவையாகச் செயலற்று, தனிமையில் படுக்கையறையிலிருந்த வசந்தாவுக்குப் பழைய நினைவுகள் நெஞ்சில் குமைந்தன.

சற்று நேரத்தில் வாசற் பக்கம் சத்தம் கேட்கவே மருண்டு அந்தத் திசையை நோக்கினாள். மாது கதவை உள்பக்கம் தாளிட்டு விட்டு வந்தான். வசந்தா அவனையே வெறிக்கப் பார்த்தாள்.

மாதுவின் முகத்தில் அருள் இல்லை; பார்வையில் ஆர்வத்தின் சுடர் இல்லை; நடையில் ஆசையின் வேகமில்லை. ஒருவரை ஒருவர் நேருக்கு நேர் காணவே கூசி உடல் குறுகி நின்றனர். காலம், செத்துவிட்டதைப் போல் நீண்டு பரந்து கிடந்தது. எப்படியோ பொழுதும் விடிந்தது. அறையை விட்டு வெளியே வந்த வசந்தாவின் கண்களைத்தான் பாட்டி கூர்ந்து பார்த்தாள். வசந்தா, இரவெல்லாம் தூங்கவில்லையா, அல்லது அழுதிருக்கிறாளா என்பதைப் பாட்டியால் முடிவு கட்ட முடியவில்லை.

ஆறு மாதங்களுக்குப் பிறகு பிறந்தகத்துக்கு வந்திருந்த வசந்தாவைப் பக்கத்தில் இருத்தி வைத்துக் கொண்டு பாட்டி, இரகசியம் பேசினாள்.



''என் ஆருயிரே! திடீரென்று நேற்று என் பெரிய உத்தியோகத்திலிருந்து நீக்கப்பட்டு விட்டேன். அதனால் நம் காதலுக்கு இடையூறு நேருமோ என்று பயப்படுகிறேன்!''

''அதனாலென்ன! நான் வேறு ஒருவரைத் திருமணம் செய்து கொண்டாலும்...நம் காதல் என் மனத்தில் நீடூழி வாழும்!''

---

''என்கிட்டே மறைக்காமல் சொல்லுடி. உங்களுக்குள்ளே மனசு பொருத்தமே—அப்படித்தானே...? நீ சொல்லலேன்னாலும் எனக்குத் தெரிஞ்சுக்க முடியாதா என்ன?'' என்றாள் பாட்டி.

''ஒருத்தரோடு வாழ்ந்துவிட்டுப் பிறகு இன்னொருத்தரோடு அந்தரங்கமா எப்படி வாழறது? என்னாலே முடியாது...முடியவே முடியாது. இதென்ன ஆடா, மாடா, அப்படி வாழறதுக்கு? அதுவும் அவரோட தம்பி இவர்....'' என்றாள் வசந்தா, வெறுப்புடன்.

''உன் வயத்திலே ஒண்ணு முளைச்சு அது சிரிச்சு நடமாடறதைப் பார்க்கலாம்னு ஆசைப்பட்டேன்.... உம்... கொடுத்து வைக்கலே. ஏண்டி, இப்படியே இருந்துடப் போறியாடி.....? முடியுமா உன்னாலே?'' என்றாள் பாட்டி சிறிது சந்தேகத்துடன்.

''ஏன்? நீ முப்பது வருஷமா இருக்கலையா? உன்னாலே சாதிக்க முடிஞ்சதுதானே இது?''

''அதுக்கில்லேயடி, நீங்கள்ளாம் இந்தக் காலத்துக் குழந்தைகள்.''

''எந்தக் காலமானாலும் பெண் பெண்தான் பாட்டி!'' என்றாள் வசந்தா அழுத்தமாக. பாட்டி ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள்.

பத்து நாட்களுக்குப் பிறகு ராமசாமி பெயருக்கு ஒரு தந்தி வந்தது.

''ஐயோ அதிர்ஷ்டம் கெட்டவளே!'' என்று கதறினார் ராமசாமி, தந்தியைப் படித்துவிட்டு. ஆற்றில் குளிக்கச் சென்ற போது மாது மூழ்கி இறந்து விட்டான் என்று தந்தியில் இருந்தது.

பாட்டி மனம் குமுறி அழுதாள். அம்மா வசந்தாவைக் கட்டிக் கொண்டு கதறினாள்.

வசந்தாவுக்கு மனத்திலிருந்து ஒரு பெரிய பாரம் இறங்கியது போலிருந்தது. கண்ணீர் வரவில்லை. தன்னைச் சுற்றி அழுபவர்களை



## உடைந்த ஜன்னல்

### (சிங்காரத்தின் ஊகங்கள்)

வெளியிலிருந்து திருடன் கண்ணாடி ஜன்னலை உடைத்திருந்தானுனல் உடைந்து சிதறும் கண்ணாடித் துண்டுகள் வீட்டின் உள் பக்கம்தான் விழுந்திருக்கும். தோட்டத்தில் புல் தரையில் கண்ணாடித் துண்டுகள் விழுந்திருந்ததால் கண்ணாடியை உடைத்தவன் உள் பக்கமிருந்துதான் அதைச் செய்திருக்க வேண்டும்.

ஆறு மணிக்கு மேல் பூ வாங்க வெளியே சென்றபோதுதான் உடைந்த ஜன்னலைப் பார்த்ததாகவும் ஆகவே திருட்டு மூன்றிலிருந்து ஐந்து மணிக்குள் நடந்திருக்கவேண்டுமென்று முனியாண்டி சொல்கிறான். தவிர ரேடியோவில் மூன்ருவது ஒலிபரப்பு 5—30க்குத்தான் ஆரம்பம். ஆகவே 5—30க்கு முன்னுல் அவனுல் மூன்ருவது ஒலிபரப்பைக் கேட்டிருக்க முடியாது.

பெரியவர் போலீசுக்குப் போக மாட்டார் என்பது முனியாண்டிக்குத் தெரியும். காரணம் உயில், பத்திரங்கள் சாம்பலாவதை அவர் விரும்ப மாட்டார். தவிர, தபால்களை முனியாண்டி மூலம்தான் போஸ்ட் செய்வார் பெரியவர். ஆகவே ரூபாய் நோட்டுகள் அடங்கிய கவரை அவன் அடைவது சுலபம். அல்லது அந்தக் கவரை அவர் தாமே போஸ்ட் செய்தாலும் தவருன விலாசத்தைக் கொடுத்திருந்தால் கடிதம் திரும்பி விடும். அப்போதும் அதை முனியாண்டி அடைவது சுலபம். ஆகவே திட்டமிட்டு இந்தத் திருட்டைச் செய்தவன் முனியாண்டிதான்.



நினைத்துப் பரிதாபப்பட்டுக் கொண்டிருந்தாள்.

பாவம்! அவளால் அவன்தான் வாழ்க்கையில் என்ன கண்டான்? பெரியவர்களின் ஏற்பாட்டுக்குத் தலை குனிந்தானே தவிர, அந்தரங்கத்தில் வாழாமல் வாழ்ந்து கருகினுன். குடும்பச் சொத்து சிதறிவிடக் கூடாது என்பதற்காக வாழ்க்கையின் இன்பத்தைச் சிதறடித்துக் கொண்டான். நல்ல வேளை, மரணம் அவனுக்குச் சீக்கிரம் விடுதலை அளித்துவிட்டது. இந்த முடிவு அவனுடைய மனத்துக்குச் சாந்தியளித்திருக்கும் என்ற மன நிறைவில் திருப்தி யடைந்தாள் வசந்தா.

ஆறு மாதங்களுக்குப் பிறகு ராமசாமியின் வீட்டுக்குச் சம்பந்தி வீட்டார் வந்து பேசிக் கொண்டிருந்தார்கள். மாடி வராந்தாவில் வசந்தா நின்று அவர்கள் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

மாதுவின் தம்பி சேகர்தான் வீட்டில் கடைசிப் பையன். கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கிறுன். இரண்டு குடும்பங்களின் உறவு விட்டுப் போகாதிருக்க வசந்தாவைச் சேகருக்கு மணம் முடிக்கச் சம்மதிப்பதாகச் சம்பந்தி வீட்டார் தெரிவித்தார்கள். ராமசாமி யோசித்துக் கொண்டிருந்தார். முதல் இரண்டு கலியாணங்களின் மூலம் தன் மகளுக்கு ஏழெட்டு லட்சங்களுக்கு மேல் சொத்துக் கிடைத்துவிட்டது என்பதில் ராமசாமிக்குப் பரம திருப்தி. தன்னுடைய இரண்டு புத்திரர்களின் மரணத்தினுல் சட்டப்படி வசந்தாவுக்கு உரிமையாகி விட்ட இரண்டு பங்கு சொத்தைத் திரும்பி வாங்க முடியாது. அதற்கு ராமசாமி சம்மதிக்க மாட்டார் என்பதால்தான், அந்தச் சொத்தை வெளியே விட்டுவிட மனமில்லாமல் தங்கள் குடும்பத்தோடேயே இணைத்துவிட வேண்டுமென்ற ஆசையில் வந்திருந்தார் சம்பந்தி. தம் குடும்பச் சொத்தில் பாதிக்குமேல் வசந்தாவுக்குச் சென்றுவிட்டதே என்ற மனப் புழுக்கம் வேறு. சந்தையில் பேரம் பேசுவது போல்தான் பேச்சு நடந்தது.

மாடி வராந்தாவில் நின்று கொண்டிருந்த வசந்தா இருப்புக் கொள்ளாமல் தவித்தாள்.

இதென்ன திருமணமா, பண்டமாற்றுதலா? பழைய பாட புத்தகத்தை ஒரே வீட்டிலிருக்கும் சகோதரர்கள் ஒருவர் மாற்றி ஒருவர் வைத்துக் கொள்வதைப் போலல்லவா நினைத்து விட்டார்கள். சீ!...

வசந்தாவின் மனம் கசந்து விட்டது. மனிதர்களைப் பணம் படுத்தும் பாட்டை எண்ணி முகம் சுளித்தாள். திடீரென்று கீழே இறங்கி வந்து நின்றுள். கையிலிருந்த தாளை மாமனுரின் முன் வைத்தாள். "உங்கள் குடும்பச் சொத்தில் எனக்கு ஒரு காசுகூட வேண்டாம். விடுதலை எழுதி யிருக்கேன். வேணும்னு நாளையே ரிஜிஸ்தர் செய்துக்குங்கோ..." என்று படபட வென்று பேசிவிட்டு மாடிக்குச் சென்று விட்டாள். ராமசாமி இடி விழுந்தவரைப் போல் திகைத்துக் கல்லாக உட்கார்ந்திருந்தார். சம்பந்தி வீட்டார் மிகுந்த மனத் திருப்தியுடன் வசந்தா எழுதிக் கொடுத்ததை எடுத்துக் கொண்டு அவசரமாக வெளியேறினுர்கள்.

எட்டு லட்ச ரூபாய் சொத்தை ஒரு விநாடியில் தெருவில் தூக்கி எறிந்துவிட்டாளே தன் மகள் என்ற மனச் சுமை தாளாமல் ராமசாமி கண்ணீர் விட்டார்.

தனக்கு வந்த வாழ்வை உதறிவிட்டுத் தனி மரமாகவே வாழ முடிவு செய்துவிட்டாளே என்ற தவிப்பில் வசந்தாவின் தாயார் கண்ணீர் சிந்தினுள்.

வசந்தாவின் விதவைக் கோலத்தை நினைத்துப் பாட்டி ஒரு மூலையில் முடங்கிக் கண்ணீரைப் பெருக்கினுள்.

மாடி அறையில் கட்டிலில் சுருண்டு கிடந்த வசந்தாவும் அழுது கொண்டுதானிருந்தாள் — எதை நினைத்து? தன்னை நினைத்தா? இந்த உலகை நினைத்தா?




பழக்கடைச் சந்து என்றே அந்தக் குறுகலான தெருவுக்குப் பெயர். பத்துப் பதினைந்து பழக் கடைகள் சேர்ந்தாற்போல் இருக்கும் அங்கே. முன்பெல்லாம் நகைக் கடைகளுக்கு எதிரே 'ஜே ஜே' என்று எப்படிக் கூட்டம் இருக்குமோ, அதைப்போல் இப்போதெல்லாம் இந்தப் பழக் கடைச் சந்தில் ஏகக் கூட்டம்; பிளஷர் கார்கள் மயம்.

மனிதனுக்கு எந்த வகையிலும் ஓர் ஆசை இருக்கிறது. நகைக்கு இருக்கும் மதிப்பை அவன் நழுவவிடுகிற அவசியத்தில், உடலுக்கு வேண்டிய மதிப்பை அவன் இப்போதெல்லாம் அதிகப்படுத்திக் கொள்ளவே விரும்புகிறானே என்று எனக்குத் தோன்றியது.

நின்று பார்த்துக் கொண்டிருந்த எனக்கு நாவில் நீர் ஊறியதாகச் சொல்ல முடியாது. நாவு கிடக்கட்டும்; அந்தக் காட்சியை என்னவென்று சொல்ல!

நேர்த்தியான பழக் கொலு: அந்தக் கொலுவில் அற்புதமான கலை நயம், பழங்களை அடுக்கி வைத்ததிலிருந்து தெரிந்தது. சாத்துக்குடி, குடகு ஆரஞ்சு, செவ்வாழை, பன்னீர்த் திராட்சை, பச்சைத் திராட்சை இவையெல்லாம் அந்த எட்டு மணிப் பொழுதில் குழல் விளக்குகளின் வித விதமான ஒளியில், வைர, வைடூரியங்களைப் போல் ஜொலித்தன. ஒவ்வொரு பழத்திலும் கவனம் செலுத்திப் 'பாலிஷ்' செய்திருப்பார்கள் போலிருந்தது. எத்தனை பளபளப்பு! ஒரு 'நகை மாளிகை' தோற்றது, போங்கள்!

ஆயினும்—

என் நாவும் கண்ணும் மனமும் நிறைவு பெற முடியாத ஓர் ஏக்கத்தை, அந்தப் பழக் கடைகளின் குறிப்பிட்ட ஒரு பகுதி இன்னும் அதிகப்படுத்தியதாகத்தான் சொல்ல வேண்டும்.

அது எந்தப் பகுதி?

ஆகா!

க. பஞ்சாபகேசன்

ஆண்டவன் இயற்கையில் இந்த ஆப்பிள் பழங்களை எதற்காகத்தான் படைத்தானோ!

இத்தனை பழங்களிலும் இந்த ஆப்பிள் பழங்கள் தாம் எத்தனை அழகாய்த் தம்மைக் காட்சிப் பொருள்களாக்கிக் கொள்கின்றன! 'காட்சிப் பொருள்' என்று சொல்லுகிறேனே என்று ஆச்சரியப்படுகிறீர்களா?

ஆம். என் சம்பந்தப்பட்ட மட்டில் இந்த ஆப்பிள் பழம் என்பது ஒரு காட்சிப் பொருளாகவே இருக்கிறது.

பாருங்களேன்! இந்தப் பழக்கடைச் சந்து முனையில் நிற்கிறேன். இந்த ஆப்பிள் பழ வரிசைகளும், அவற்றின் செழுமை, வண்ணம், அழகு, 'ஆரோக்கியம் தர இதோ இருக்கிறேன்' என்னும் அறைகூவல் ஆகியவையும் என் இதயத்தைக் கிளர்ச்சி

செய்தாலும் ஒரே ஒரு ஆப்பிள் பழம் வாங்கிச் சாப்பிட இந்த ஐந்து வருஷ காலமாக எத்தனையோ முயற்சி செய்கிறேன், என்றால் முடியவில்லையே!

என்னவோ இந்த 'ஆப்பிள் ஏக்கம்' இப்படியேதான் இருந்து கொண்டிருக்கிறது என்றான்.

இன்றும் இப்படித்தான்.

பையில் ஐந்து ரூபாய் நோட்டு இருந்து குறுகுறுத்துக் கொண்டிருந்தது.

பழக் கடைக்காரர் ஒரு நல்ல குண்டான ஆப்பிளைப் போலவே அமர்ந்திருந்தார். நல்ல கிராக்கி நடைபெற்றுக் கொண்டிருந்தது.

என்னைக் கண்டதும், ''சாருக்கு என்ன தர? பன்னீர்த் திராட்சை ஒரு ஐந்நூறு கிராம் தரவா?'' என்றார், தமது காவி படிந்த பற்களில் புகையிலைக் குழப்பம் தெரிய.

தொண்டையைச் சரி செய்து கொண்டு, ''ஆப்பிள் என்ன விலை?'' என்று கேட்டேன்.

''சிங்கிளா? டஜனா?'' — கடைக்காரர்.

''எப்படியும் சொல்லுங்கள்'' என்றேன்.

''சிங்கிளானால் ஒன்றேகால் ரூபாயிலிருந்து இரண்டரை ரூபாய் வரை ரகம் இருக்கிறது; இதுகளை டஜனாக எடுத்துக் கொள்வதானால் பதினாறு ரூபாயிலிருந்து முப்பது ரூபாய்வரை இருக்கிறது. ரகத்தைப் பார்க்க வேண்டாம் சார்! காஷ்மீர் என்றால் காஷ்மீர்தான்! ஆஸ்திரேலியா என்றால் ஆஸ்திரேலியாதான்!''

இப்படிச் சொல்லிக் கொண்டே போன கடைக்காரர் என் கண்ணையும் யோசனையையும் கணத்தில் கண்டவராய், 'இந்த ஆள் இதற்கு லாயக்கு அல்ல' என்று எண்ணிக் கொண்டாரோ என்னவோ, மேலே கிராக்கிகளைக் கவனிக்கத் தொடங்கியபோது, நான் மெல்ல நகர்ந்தேன்.



அதே சமயம் விமானம் போல் ஒரு கார், பூமியில் பறந்த வண்ணம் வந்து நின்றது.

கடைக்காரரும் காருக்குள் இருந்தவரும் உட்கார்ந்த இடத்திலேயே இருக்க, 'நாலு டஜனா?' 'டேய் பையா, கூடையை எடு' என்றும் சொற்கள் பரிமாறப்பட்டன.

அடுத்த கணத்தில் நாலு டஜன் ஆப்பிள் பழங்கள், என் கண்ணுக்கு அருவியைப் போல் அந்தக் கூடைக்குள் கொட்டப்பட்டு, காருக்குள் சென்றன.

நூறு ரூபாய் நோட்டுக்கு நிமிடத்தில் சில்லறை தந்தார் கடைக்காரர். அதை எண்ணக்கூட நேரமில்லாமலோ அல்லது அவசியமில்லாமலோ வாங்கிப் போட்டுக் கொள்ளவும், கார் தன் ஹாரனில் சூழ்நிலையைக் கிறங்க வைத்துப் புறப்பட்டது.

இப்போது பழக்கடைச் சந்துக்கும் எனக்கும் இருந்த இடைவெளி சுமார் ஒரு பர்லாங்கு தூரத்துக்கும் மேலிருக்கும். பஸ் ஸ்டாப்பில் நவத்தைத் தொடங்கியிருந்தேன், வீட்டுக்குச் செல்ல.

நினைவுகளை இந்த ஆப்பிள் பழம் இப்படிப் பற்றிக் கொள்ள வேண்டாம்!

ஒன்றே கால் ரூபாய் கொடுத்து ஒன்றை வாங்கி, அதைப் 'படக் படக்' என்று கடித்துச் சாப்பிட்டால்தான் என்ன? நாவில் கரைவது கூடத் தெரியாத இன்சுவையாமே அதற்கு? உமிழ் நீர்ச் சுரப்பிக்குக் கூடத் தெரியும் போலிருக்கிறது, நாவுக்கடியில் அகப்பட்டிருப்பது பழங்களின் அரசன் ஆப்பிள் என்று!

ஆனால் என்னால் இந்த ஏக்கத்தைத்தான் வளர்த்துக் கொள்ள முடியும் போலிருந்தது. நினைவு அலைகள் சூழ நின்றேன்....

என் இலாகா சூப்பிரெண்டுக்கு அன்று பிறந்த நாள். நாற்பதாவது வயது. எனது சக எழுத்தருக்கு — அதாவது குமாஸ்தாவுக்கு ஒரே குஷி! அன்று இலாகாவுக்கு ஒரு டஜன் ஆப்பிள் பழம் வாங்கிக் கொண்டு வந்தார்.

ஆம். இலாகாவில் நாங்கள் சரியாகப் பன்னிரண்டு பேர், சூப்பிரண்டு உட்பட. அத்தனை பழங்களையும் அவர் மேஜையின் மேல் வைத்து, ஆளுக்கு ஒன்றாக அவர் உட்பட ஆனந்தமாய்க் கடித்துச் சாப்பிட்டு, அவருடைய 'சகல ஆரோக்கியத்துக்குமாகப் பிரார்த்திக்க' முடிவு செய்தோம். இந்த நிகழ்ச்சி பிற்பகல் மூன்று மணிக்கு நடைபெறுவதாக இருந்தது. சூப்பிரண்டுக்குக் கூட இதைத் தெரிய வைக்காமல், திடுதிப்பென்று இதை நடத்த அந்தச் சக எழுத்தர் தீர்மானம் போட்டிருந்தார்.

மேஜைக்கடியில் பத்திரமாக வைக்கப்பட்டிருந்த ஆப்பிள் கூடையிலிருந்து 'கம்' என்று பழ வாசனை. எனக்கு வேலை ஓடினால் தானே? என் அபிலாஷை அன்று நிறைவேறப் போகிறது! நான் ஓர் ஆப்பிள் பழம் சாப்பிடப் போகிறேன்! ஒரு பைசாச் செலவு கிடையாது! சூப்பிரண்டெண்டின் ஆதரவு பெற நண்பர் செய்யும் காரியம் என்று எனது சூழ்நிலை கிசுகிசுத்தால் எனக்கென்ன?

எனக்கிருந்த இந்தப் பலவீனத்தை வெளியில் பகிரங்கப்படுத்தவும் முடியாமல் என்



'சிகப்பு' ''கார்டினல் பாலிஷ்''
உங்கள் வீட்டுத் தரையைப் பளபளக்கும்
ஒளிவீசச் செய்கிறது.

ரெட்

# கார்டினல்

பாலிஷ்




கார்டினல் (பாலிஷை) சிறிதளவைப் பயன்படுத்தினால் போதும், தரைகள் நல்ல சிவப்பு நிறமேறிப் பிரகாசிக்கத் தொடங்கி விடும். அந்தப் பளபளப்பு நெடுநாள், நிலைத்து, நீடிக்கக்கூடிய தாகும்! 'சிகப்பு' கார்டினல் பாலிஷை உபயோகித்ததும், சாதாரணச் சிமிட்டித் தரையும்கூட, கண்ணைக் கவரும் செவ்வண்ணம் பெற்றுப் பளபளக்கும். உங்கள் வசிக்கும் வீடு உற்சாகமூட்டும் சூழ்நிலையை உருவாக்குகிறது.

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது.)

ARCC-I TAM


சக்திக்கும், வலிமைக்கும்!
கோகோ
சர்க்கரை
பால்
மால்ட்
Bournvita
THE IDEAL FOOD DRINK FOR STRENGTH AND VIGOUR
ஊட்டப்பொருள்கள் அனைத்தும் ஒருங்கே தேவையா? ஒரு கப் போர்ன்விடா அருந்துங்கள். தசைகள் வளர புரதங்களும், சக்திக்கும் வலிமைக்கும் புஷ்டியான மாவுச்சத்தும், எலும்புகளை வலுவாக்க தாது உப்புக்களும், பூரண ஆரோக்கியத்திற்கு மிக்க அவசியமான வைட்டமின்களும் இதிலே உள்ளன. மிகச்சுலபமாக தயாரிக்கலாம். காலையில் உற்சாகத்துடன் எழுந்திருக்க வேண்டுமா? இரவில் அமைதியாக உறங்க வேண்டுமா? போர்ன்விடா அருந்துங்கள்.
காட்பரீஸ் போர்ன்-விடா

எதிரே தடிமனாக இருந்த 'லெட்ஜர்'களின் மேல் கண்ணோட்டம் விட்டுக் கொண்டிருந்தேன். எண்கள் எண்களாகத் தெரிந்தால் தானே? ஒவ்வோர் எண்ணிலும் ஒவ்வோர் ஆப்பிள் அல்லவா நடமாடியது?

இரண்டேமுக்கால் மணி இருக்கும். சூப்பிரெண்டு நாங்கள் இருந்த பகுதிக்கு வந்தார். பாவம், பிறந்த நாளான அன்றும் கடமை தவறாமல் உழைக்கிறார் அவர்! ஜெனரல் மானேஜர் அறைக்கு வழக்கத்துக்கு மாறாகப் பத்துப் பதினைந்து தடவைகளாவது அன்றைக்கென்று போய்விட்டு வந்தார் அவர்!

''என்ன இது, பழ வாசனை வருகிறது இங்கு!'' என்றார் அவர்.

அதற்குள் ஏற்பாடுகள் எல்லாம் செய்திருந்த அந்தச் சக எழுத்தருக்கு அவரே உற்பவித்திருந்த அந்த இரகசியத்தின் 'குட்டை' உடைத்து விடுவதில் அவசரம்! அவர் படபடத்தார்:

''....ஆப்பிள் பழம் சார்! டு விஷ்யூ எ லாங் அண்ட் பிராஸ்பிரஸ் லைஃப், சார்! இன்று உங்கள் 'பர்த் டே' ஆயிற்றே!...''

அவரைப் பார்த்து சூப்பிரெண்டின் முகம் மலர்ந்தது. எழுத்தர் முகத்தில் பெருமை வழிய, எங்களையெல்லாம் பார்த்தார்.

சூப்பிரண்டின் குரல்: ''பெரிய கூடையாக இருக்கும் போலிருக்கே!''

''பன்னிரண்டு சார்!... நாம் பன்னிரண்டு பேர் இருக்கிறோமல்லவா? இன்று உங்கள் ஆரோக்கியத்துக்காகப் பிரார்த்தித்து எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து சாப்பிட்டு...'' என்று எழுத்தர் சொல்லிக் கொண்டே வந்த போது, எதிர்ச் சுவரில் கடிகாரம் சரியாய் மூன்று மணி காட்டியது. அதைப் பார்த்துக் கொண்டே, ''...உங்கள் மேஜைக்குப் பழக் கூடையை எடுத்துக் கொண்டு எல்லோரும் சேர்ந்து வருகிறோம், சார்...'' என்று சொல்லி முடிக்கவில்லை....

சூப்பிரண்டெண்ட் எழுத்தரின் தோள் மேல் தம் கையை வைத்தார். எழுத்தருக்கு மட்டுமா புல்லரித்திருக்கும்? எங்கள் எல்லோருக்குமே அல்லவா புல்லரித்தது! அவர் அப்படிச் செய்தது. அடுத்த விநாடி அவர் சொன்னார்:

''...என்ன ரகுநாத்! என் உடல் நிலைபற்றி உனக்குத் தெரியாதா? 'ஆல் ஸார்ட்ஸ் ஆப் கம்ப்ளெயிண்ட்ஸ் எனக்கு இருக்கிறது' என்று டாக்டர் சொல்லி வருவதைத் தினசரி அலறி வருகிறேனே நான்... என் ஆரோக்கியத்துக்காகத்தானே நீங்கள் அனைவரும் இப்படிச் செய்ய விருக்கிறீர்கள்? அப்படியானால் இப்படிச் செய்தால்தான் எனக்குப் பூரண திருப்தி. இந்தப் பழக் கூடையை அப்படியே என் வீட்டுக்கு அனுப்பிவிடுங்கள். எங்கே 'அட்டண்டர்'? கூப்பிடு!''

என் இதயம் விம்மித் தணிந்தது. ஏக்கம் ஓர் உருண்டையாய் என் தொண்டையில் அடைத்தது.

பெங்களூர் தமிழ்ச் சங்கத்தினர் ஏற்பாடு செய்திருந்த திருவள்ளுவர் விழாவுக்குத் தமிழில் சொற்பொழிவு ஆற்ற வந்திருந்தார், செம்பியன் எனும் புனைபெயர் கொண்ட ருஷ்ய திரு செமியோனருதின். நாம் தமிழ் மொழி கற்கையில் முதலில் சொற்களை உச்சரிப்பதற்குப் பட்ட பாட்டைக் கூறி, தொடர்ந்து ஒரு சுவையான நிகழ்ச்சியைக் கூறினார்:

''எனது மனைவிக்கு இரண்டு மூன்று தமிழ் வார்த்தைகள் தெரியும். ஒரு சமயம் நான் என் மனைவியோடு லெனின்கிராடிலிருந்து, மாஸ்கோவுக்குச் சென்றேன். அப்போது அங்கே தமிழ்த் தொண்டாற்றி வந்த திரு மீனாட்சிசுந்தரம் அவர்களைக் காணப் போனேன். அப்போது எங்களுக்கு உண்பதற்கு 'ரஷ்யன் ஸலாட்' வழங்கினார், மீனாட்சி சுந்தரம். என் மனைவி தனக்குப் போட்டது போதும் என்பதை அவருக்குத் தமிழிலேயே தெரிவிக்க எண்ணினாள். 'போதும்' என்பதைச் சரியாக உச்சரிக்கத் தெரியாமல் 'போடும் போடும்' என்று சொன்னாள். அதனால் எனக்குப் போட வைத்திருந்த ஸலாட் கூட அவள் தட்டிலேயே விழுந்தது!''




தகவல்: பெங்களூர் பி. கே. சேகர்

---

இதோ பஸ் ஸ்டாண்டில் அதைப் பற்றி நினைத்துக் கொண்டால் கூட எனக்கு ஏற்பட்ட அந்த 'ஸடைரிக் சஸ்பென்ஸ்' இப்பொழுதும் என் மனசை உறுத்தவே செய்கிறது.

'பஸ் சீக்கிரம் வராதா' என்று நான் ஏக்கம் கொள்வதுண்டு. இன்றைக்கு இப்படி நேரமாகிக் கொண்டிருக்கவே 'ஆப்பிள் ஏக்கம்' என்னை வெகு நன்றாகப் பற்றிக் கொண்டது.

கல்யாணமாகி ஐந்து வருஷங்களாகியும் எனக்கென்று ஒரு குழந்தை குட்டியும் பிறக்காதிருக்கிற நிலையிலும், என் உறவினர்கள் என்னைப் பற்றிக் கிசுகிசுக்கும்போதெல்லாம் ''அகமுடையான் பெண்டாட்டிதான்! — ஜென்மங்கள். இந்தக் காலத்தில் யாருக்குக் குழந்தை வேண்டும் என்கிறார்கள்?...ஆனால் இரண்டு காசு சேர்த்துக் கொள்ளக்கூட மாட்டார்களோ? இருபது, முப்பது என்று கேட்டால், இரண்டு ஒன்றுகூட இல்லை என்கிறார்களே!'' என்பார்கள்.

பஸ் ஸ்டாப்பில் தவத்தில் ஈடுபட்டிருக்கும் நான் இதயத்துள் சிரித்தேன்: 'ஒன்றே கால் ரூபாய் கொடுத்து ஒரு பழத்தை வாங்

கத் தயங்குவது எதனால்? காசு சேர்த்திருந்தால் — சேர்க்க முடிந்திருந்தால் — என் ஏக்கத்தைத் தீர்த்துக் கொள்ள எத்துணை போதாமலிருக்கும்?'

என் இளம் மனைவி!

ஏன், அன்றொரு நாள் எனது அசுர ஆவலைப் பற்றி யெல்லாம் அவளிடம் கூடத் தெரிவித்தேனே...

அவள் 'கலகல'வென்று மல்லிகைப் பூ உதிர்வது மாதிரிச் சிரித்தாள்.

''வாங்கிச் சாப்பிடுங்களேன்... அதென்ன பிரமாதம்? எங்கள் பாட்டி சொல்வாள்: 'ருசியெல்லாம் நாவளவில்தான்; நாக்குக்கு அந்தண்டையில் தொண்டையில் இறங்கி விட்டால் அப்புறம் ருசி ஏது?' — ஆப்பிளோ ஆரஞ்சியோ எது சாப்பிட்டாலும் இப்படித்தானே?''

''பெரிய நூற்றுக் கிழவி மாதிரிப் பேசுகிறாயே...''

என் மனைவி மேலும் சிரித்தவளாய், ''எந்த ஆசைக்கும் ஓர் எல்லை அமைவது சகஜம்தானே?'' என்றாள்.

அந்த வார்த்தைகளை இதோ இங்கே பஸ் ஸ்டாண்டில் நான் நினைத்துக் கொள்கிறேன்.

பைக்குள் பணம் இல்லாமல் இல்லை; எதிரே பர்லாங்கு தூரத்தில், பழக் கடைகளில் ஆயிரமாயிரம் ஆப்பிள்களும் இல்லாமல் இல்லை.

ஆனால் ஒரு பழத்தை வாங்க எனக்கு ஏன் இந்தத் தயக்கம்? ஆசை, ஏக்கம் எல்லாமும் இருக்கின்றன. ஆயினும் இவ்வுணர்வின் தணிப்பை ஏன் இன்னமும் எட்டாத நிலையிலேயே வைத்துக் கொண்டிருக்கிறேன்?...

அதோ பஸ் வந்து விட்டது. ஆப்பிள் பழத்தைப் பற்றிய சிந்தனைக்கு முற்றுப் புள்ளி வைத்துவிட்டு பஸ்ஸைப் பிடிக்க நகர்ந்தேன். அதில் இடம் இருந்தது மட்டுமல்லாமல், நின்றும் என்னை ஏற்றிக் கொண்டது!

பதினாறு பைசா தூரப் பயணத்தைத் தொடங்கினேன்.

''இந்தாய்யா, காசு! எனக்கு டிக்கட் கொடு!''

''ஸார்! டிக்கட் ப்ளீஸ்!'' கண்டக்டர் அடுத்த ஆளை நெருங்கினார்.

பின்னால் குரல்கள், கண்டக்டரும் ஒரு வயதான பிராணியும் ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டது, கவனத்தைக் கவர்ந்தது.

''ஒத்தை நயா பைசா குறையுது, தம்பி!'' என்றார் அந்தப் பஸ் பிரயாணி.

''அப்படின்னா பெரியவரே அடுத்த ஸ்டாப்பிலே இறங்கிடுங்க.....'' — கண்டக்டர்.

''என்ன தம்பி, ஒரே ஒரு பைசாதானே?''

''கலாட்டா வேணும் பெரியவரே...''

''ஊட்லே குழந்தைங்கட்கு ரெண்டு பூவம் பழம் வாங்கிட்டேன் தம்பி....., ஒத்தைப் பழம் ஏழு பைசா விதம் பதினாலு பைசா பிடுங்கிக்கிட்டான். இப்போ வாழைப்பழம் கூட ஆப்பிள் பழம் கணக்காத்தானே விக்குது? அதைப் பார்த்து இதைச் சாப்பிட்டுக்கிட்டு இருந்தோம்; இப்போ இதையும் பார்த்துக்கிட்டே எதையும் சாப்பிட முடியாது போலிருக்கே?..... இந்தப் பேரத்துலே ஒரு பைசா குறைஞ்சு போயிட்டுது, தம்பி!'' என்றார் பெரியவர் அழாக்குறையாக.

''இந்தக் கதையெல்லாம் எனக்கு வேணும், பெரியவரே!''

''வேண்ணா இதுலே ஒரு பழத்தைக் குடுத்திடறேன் தம்பி... நீ சாப்பிடு!...''

கண்டக்டர் மட்டுமா, சூழ்நிலையே நகைத்தது. நானும் சிரித்தாலும், எனக்குச் சிரித்தது மாதிரி இருக்கவில்லை.

கண்டக்டர் 'டிக்கட்ஸ், டிக்கட்ஸ்' என்று மேலே சென்றுவிட்டார், போனால் போகிறது என்றெண்ணி.

பஸ்ஸை விட்டு நான் இறங்கியதும், என் இதயம் 'பளிச்'சென்று துலங்கியிருப்பதை உணர்ந்தேன்.

என் இல்லத்தரசி சொன்னபடி, எனது ஆசையின் எல்லையை அப் பெரியவர் கணித்து, 'வாழைப் பழம்கூட ஆப்பிள் பழம் கணக்கா விக்குது' என்றார்?

ருசி, நாவளவில்தான்; இதயம் நாவை அடக்கும் வித்தையைக் கைவரப் பெற்றவனாக நான் வீட்டை நோக்கி நடந்தேன்.



## துணிச்சல்காரர்!

தற்போதைய தலைமைத் தளபதி குமாரமங்கலம் மிகவும் துணிச்சலானவர். அவரது வீரத்துக்கு ஓர் எடுத்துக்காட்டு:

இரண்டாவது உலக மகா யுத்தத்தின்போது பிரிட்டிஷ் படையும், இந்தியப் படையும் சேர்ந்து ஜெர்மானியப் படைகளைத் தாக்கிவந்தன. குமாரமங்கலம் இருந்த படைப் பிரிவு ஓரிடத்தில் பின்வாங்க வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டது. பிரிட்டிஷ், இந்திய சிப்பாய்கள் தாங்கள் சுலபமாகப் பின் வாங்கிச் செல்வதற்காகத் தங்கள் ஆயுதங்களை அந்தந்த இடத்திலேயே போட்டு விட்டுப் போயினர். ஆனால் குமாரமங்கலத்துக்கோ ஆயுதங்களைப் பகைவர்கள் எளிதில் கைப்பற்றக்கூடிய விதமாகப் போட்டு விட்டு ஓடிவந்தது மனத்தை உறுத்திக் கொண்டேயிருந்தது. அவர் தம் உயிரையும் மதிக்காது அன்று இரவோடு இரவாக ஜெர்மன் மேஜர் ரோமல் தலைமையில் இயங்கும் எதிர்ப்படைகளுக்குப் பின்னால் யாரும் அறியாமல் சென்று தம் படையினர் விட்டு விட்டு வந்த ஆயுதங்களையெல்லாம் திரும்பக் கொண்டு வந்து சேர்த்தார். இந்த வீரத்தைப் பாராட்டி அவருக்குப் பதக்கம் அணிவித்துக் கௌரவித்தது அரசாங்கம்.

ஆதாரம் : 'மெயில்'
தகவல் : கவி. ஸ்ரீதரன்.



# வளைவுகளிலே அதிக நிலையுறுதி

பயர்ஸ்டோன் டீலக்ஸ் சாம்பியன் கார் டயரிலுள்ள பிரபல "ராப்-அரவுண்ட்" டிரெட் அமைப்பின் அகலம் 18% அதிகம்...சாலைமீது அதிக ரப்பரைப் பதியச் செய்வதனுல், எவ்வகை சீதோஷ்ண நிலையிலும் எத்தகைய சாலையிலும் சரி, குறிப்பாக நியர் வளைவுகளிலும் முனைத் திருப்பங்களிலும் அபாரமான நிலையுறுதியை நிரூபிக்கிறது: உல்லாசமாக ஓட்டும் சுகத்தை உங்களுக்கு அளிக்கிறது.

ஸுப்பர்-டஃப் ரப்பர்– அதிகச் செலவின்றி ஆயிரக் கணக்கான மைல்கள் அதிகமாக ஓடவும், அதிக ரீடிரெட் பெறவும் உதவுகிறது.

நான்–ஸ்கிட் ஆங்கிள் ஸேஃப்டி டிரெட்—வழுக்கும் ஆபத்தையே தவிர்க்கிறது.

ராப்–அரவுண்ட் டிரெட் அமைப்பு-- சாலைமீது உன்னதமான நிலையுறுதி தருகிறது.

**Firestone** பயர்ஸ்டோன் டீலக்ஸ் சாம்பியன் டயர்

**ராப்-அரவுண்ட்** டிரெட் பொருந்தியது



பிடிப்புத் திறனுக்குப் பின்பலமான வலிமையை அளிக்கிறது.

Stronachs-Z 25 TM




- வித்தியாலயம் வரவேற்கிறது!
- சிலம்புச் செல்வர் ம. பொ. சி.
- சேவைக்கு ஒரு சகோதரி
- நாணய மதிப்புக் குறைவு

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் அனுக்கிரஹ விசேஷத்தினால் நடைபெற்று வரும் லால்குடி முத்தரசநல்லூர் பாலகுருகுலம் ஓரியண்டல் ஹைஸ்கூல்கள் கோடைவிடுமுறைக்குப் பிறகு திறக்கப்பட்டிருக்கின்றன.

லால்குடியில் இந்த ஆண்டு முதல் ஒன்பதாவது ஸ்டாண்டர்டு ஆரம்பிக்க ஏற்பாடாகி உள்ளது.

இந்த ஆண்டு முதல் மத்திய சர்க்காரின் உபகாரச் சம்பளங்கள் இந்தக் குருகுலத்தில் படிக்கும் மாணவர்களுக்குக் கிடைக்கும். இந்த உபகாரச் சம்பளங்கள் ஒவ்வொரு வகுப்பிலும் முதலாவதாக மார்க்குகள் பெறும் பத்து மாணவர்களுக்கு அளிக்கப்படும்.

மாதம்தோறும் தரப்படும் உபகாரச் சம்பள விகிதம்: ஆறாவது ஸ்டாண்டர்டுக்கு ஐந்து ரூபாய்; ஏழாவது ஸ்டாண்டர்டுக்கு ஆறு ரூபாய்; எட்டாவது ஸ்டாண்டர்டுக்கு ஏழு ரூபாய்; ஒன்பதாவது ஸ்டாண்டர்டுக்கு எட்டு ரூபாய்.

இதைப் பயன்செய்து கொண்டு பெற்றோர்கள் தங்களது குழந்தைகளை இந்தக் குருகுலத்துக்கு அனுப்பி வைக்க வேணுமாய்ப் பிரார்த்திக்கின்றோம்.

முத்தரசநல்லூர் — வி. என். ரெகுநாதராவ்
15–6–66 — கே. வி. ரத்னம்.

'சிலம்புச் செல்வர்' ம. பொ. சி. பற்றிய கட்டுரை என் கண்களில் நீரை வரவழைத்தது. அவரது வறுமை வாழ்க்கையை உருக்கமாக எழுதியுள்ள கட்டுரை ஆசிரியர், அவர் தமிழுக்கும், சமுதாயத்துக்கும் செய்துள்ள தொண்டுகளையும் புரிந்த சாதனைகளையும் விரிவாகக் கூறாமல் விட்டு விட்டார். இது ஒரு குறை.

காரைக்கேணி,
23–6–66 — சி. இராக.

பேராசிரியர் கல்கி, ம.பொ.சி. வீட்டுச் சமையலறையில் பூனை தூங்குவது கண்டு கண்ணீர் வடித்தார். அவரது ஏழைமையை நினைத்து! ஆனால் உண்மையான தமிழ் நெஞ்சங்கள் இன்று ம. பொ. சி.யின் மணி விழாவினைக் காண கல்கி இல்லையே எனக் கண் கலங்குகின்றன. கட்டுரையினை மெய்யுருக எழுதியுள்ளார் திரு வி. ரங்கநாதன்.

சென்னை–11
24–6–66 — பாசி. இராமச்சந்திரன்

இந்த இதழோடு நிறைவுற்ற சகோதரி கட்புலட்சுமியின் வாழ்க்கைச் சித்திரம் மிகவும் உருக்கமாக, ஆத்மீக – சமதர்மப் புரட்சியின் தார்மீகத்தோடு நிறைந்தது. புரட்சிக் கவியின் கைம்பெண் வேதனைக்கு ஒரு மாற்றாக—நவயுக நங்கையர்க்கு ஒரு வழிநூலாகச் சேவையின் கண் நிறைவுறும் உள்ளத்தின் உயர்வை உணர்த்துவதாக அமைந்திருப்பது சகோதரியின் கதை.

வாழைப்பந்தல்
24–6–66 — கோவி. பரஞ்சோதி

"நான்கு சுவர்களுடன் கூடிய இருட்டறைதான் நம் வாழ்க்கை" என எண்ணி வாழ்ந்திருந்த ஆயிரக் கணக்கான விதவைச் சகோதரிகளுக்குப் புனர் வாழ்க்கை அளித்துப் பெண் குலமே பெருமைப்படும் வகையில் சேவை செய்து வாழ்ந்து வரும் சகோதரி கட்புலக்ஷ்மியின் வரலாற்றை வெளியிட்ட தங்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

நெய்வேலி,
24–6–66 — அவயம்

'திரிகடுகம்' என்ற தலைப்பில் வெளியான வெண்பாக்களில் தளையிலக்கணம் பின்பற்றப் படவில்லை.

**'திரிகடுகம்' என்றதோரு தேன்தலைப்பில் வந்த**
**பரிதாபத்துக் குரிய பாவின் - சரியாய்**
**தளையில்லா காண்பின் தமிழ்மாதும் இன்று**
**களையிழந்து காணுவளோ காண்!**

சேலம்
23–6–66 — பி. தேவ அரசு

அநுபவத்துக்கும், அறிவுக்கும் உரிய மதிப்பளிக்காததினால் ஏற்பட்டிருக்கும் விளைவுதான் இன்றைய ரூபாய் மதிப்புக் குறைப்பு. பொருளாதாரத் துறை, உற்பத்தித் துறை, விவசாயத் துறை போன்ற இனங்களில் அரசினரின் கொள்கைகளைச் சுதந்திரக் கட்சி அனுஷ்டிருக்கும் முறையினை நன்கு அறிந்தவர்கள், இன்றைய அவலநிலையை முன் கூட்டியே கணித்த ராஜாஜியின் மேதாவிலாசத்தைப் பாராட்டத் தயங்க மாட்டார்கள்.

தான் செய்த தவறுக்காகக் காங்கிரஸ் அரசாங்கம் தோல்வியடையச் செய்ய வேண்டும். அல்லது துரதிர்ஷ்டவசமாக மீண்டும் அது ஆட்சி பீடம் ஏறுமானால் எதிர்க்கட்சிகளுக்கு உரிய மதிப்பளித்து ஆளவாவது கற்றுக் கொள்ள வேண்டும்.

சென்னை
6–6–66 — மதுரைதாஸ் எம். ஏ

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Kalki Press Kilpauk Madras-10

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon